

# கோகிலத்தின் தீங்குரல்

















ஸ்ரீமதி என்.ஸி. வஸந்தகோகிலம்




N. 18207 { இந்த வரம் - கரஹரப்ரியா
{ உதய ஸுந்தரி - விருத்தம்

N. 18206 { ஞானகுருபர (பாகம் 1) பல்லவி
{ ,, (பாகம் 2) இராகமாலிகை

## "ஹிஸ் மாஸ்டர்ஸ் வாய்ஸ்"

M. SAMUEL

எல்லா "எச். எம். வி." கிராமபோன் வியாபாரிகளிடமும் கிடைக்கும்

நீண்ட காலம் உபயோகிக்கக் கூடிய

● ஒரு ஊசியினால் பல ரிகார்டுகளை பாடுவிக்கலாம்.

"எச். எம். வி." ஹைபிடெலிடி ஊசிகள் 10 ஊசிகளடங்கிய பாக்கெட் ஒன்றின் விலை ரூ 2/4.

**கொலம்பியா** ரிகார்டுகளில்

M.K. தியாகராஜ பாகவதர் பாடிய

# சிவகவி

டாக்கி பாட்டுகள்

GE. 6105 { வள்ளலைப் பாடும் / ஸ்வப்பன வாழ்வில்

GE. 6106 { வதனமே சந்த்ர / வஸந்தருது

ஸரஸ்வதி ஸ்டோர்ஸ், ... மதராஸ்.

மேற்கண்ட ரிகார்டுகள் எங்களிடம் கிடைக்கும்.

S. கண்ணன் & கம்பெனி, திருச்சிறாப்பள்ளி.



# “அவனுடைய பலம் எங்கிருந்து வருகிறது?”

இதர ஸ்திரீகள் தன்னுடைய குழந்தையைப் பற்றி புகழ்ந்து பேசும்போது தாய்மார்களுக்கு எவ்வளவு சந்தோஷம் உண்டாகிறது. தங்கள் குழந்தைகள் தேக ஆரோக்கியமாக இருக்க அவர்கள் எடுத்துக் கொள்ளும் சிரமம் மெச்சக் கூடியது. போதிய பலம் இல்லாத குழந்தைகள் சீக்கிரம் சக்தியை இழந்து ஆரோக்கியத்தையும் கெடுத்துக் கொள்ளுகிறார்கள்.

உங்களுடைய குழந்தைகளுக்கு விடமின் கூடினதும், போஷாக்கை அளிக்க வல்லதுமான ஆகாரத்தைக் கொடுப்பது அத்தியாவசியம். இந்த சமயத்தில் தான் விடமின் சேர்ந்த டால்டா நன்கு உதவுகிறது டால்டாவினால் ஆகாரத்திற்கு சேர்க்கப்படும் விடமினும், ரக்ஷண சக்தியும் தான் பலத்திற்கும், ஆரோக்கியத்திற்கும் காரணம். குடும்பத்திலுள்ளவர்களுக்கு பலம் அவசிய மாகையால் வேண்டிய ஆகாரங்களை டால்டாவினால் சமையல் செய்யுங்கள்.



*விடமின் சேர்ந்த டால்டா சரீரத்தை திடகாத்திரமாக வளரச் செய்யவும், குறைந்த பலத்தை ஈடு செய்யவும் உதவுகிறது . . . விடமினுடன் சேர்ந்த டால்டா ஓர் சிறந்த ஆகார வஸ்து. அது சக்தியைத் தரத்தக்கது. உணவுகளை டால்டாவினால் தயார் செய்தால் ஆகாரத்திற்கு அதிக சக்தி கிடைக்கிறது. அநேக உணவுப் பொருள்களில் விடமினும், சக்தியும் குறைவாக இருப்பதால், டால்டாவினால் உணவுகள் தயாரிப்பது ஓர் சிறந்த முறை. அது பாலர்களுக்கும், விருத்தர்களுக்குங்கூட நல்லது.*






## விடமின் சேர்ந்த டால்டா

தாவர எண்ணெயால் தயார் செய்யப்பட்டதென்று உத்திரவாத முள்ளது—
சீல் செய்த டின்களில் விற்கப்படுகிறது

HVM. 7' -18 TM — THE HINDUSTAN VANASPATI MANUFACTURING CO., LTD., BOMBAY

# கல்கி
## பொருளடக்கம்

மலர் 2 இதழ் 36 | 1943 ஜூலை 20 | சுபானு ஆடி 4








★

ஈச்ச மரக் காட்டினைத் தூரத்திலிருந்து பார்த்தாலே, "ஆஹா! பிழைத்தோம்! பிழைத்தோம்!" என்று ஆனந்தக் கூச்சலிடுவார்களாம் பாலைவனத்தில் பிரயாணம் செய்யும் மக்கள். கானல் நீரைக் கண்டு ஏமாந்து களைத்து வந்த பிரயாணிகளுக்கு 'ஓயஸிஸ்' என்ற நீர் நிலைகளும் அதைச் சுற்றியுள்ள ஈச்ச மரங்களும்தான் உயிர், சுவர்க்கம் எல்லாம். ஈச்சமரங்கள் பாலைவனத்தில் இல்லாமல் இடம் விட்டுப் பெயர்ந்து சென்னைக்கு, அதிலும் சர்வ கலாசாலைக் கட்டிடங்களுக் கருகில் வருவானேன் என்று யோசித்துப் பார்த்தோம். ஆமாம்; இந்தக் "கல்கி" இதழின் அட்டையை அலங்கரிப்பதற்காகத்தான் வந்திருக்க வேண்டும். "கல்கி"யில் வெளியான "தமிழ் மகன்" கட்டுரைகளினால் தமிழ் நாட்டில் ஏற்பட்டிருக்கும் சிறு புயலின் அறிகுறியையும் இந்தப் படத்தில் காண்கிறோமல்லவா?

★

# We keep good time!

## AND SO DO WE!



**செகண்டலை டோனோ**

பேடண்ட் எவர்பிரைட்ஸ்டீல் ரூ. 54
ரோல்டு கோல்டு ... ... ரூ. 65
9 காரட் சாலிட் கோல்டு ... ரூ. 111



**செகண்டஸ் ரெக்டாங்குலர்**

நிக்கல் ஸில்வர் ... ... ரூ. 50
ரோல்டு கோல்டு... ... ரூ. 66

## நல்ல நம்பிக்கையுள்ள கெடிகாரங்கள்!

ஒரு கெடிகாரத்தின் முக்ய அம்சம் சரியான மணியைக் காட்டுவதே. வருஷக் கணக்காக உழைத்து சரியான மணியைக் காட்ட அதன் பாகங்களெல்லாம் நல்ல மூலப் பொருள்களால் செய்யப்பட்டு வெகு நுட்பமாக அமைக்கப்படுதல் வேண்டும். எல்லா 'வெஸ்ட் எண்டு' கெடிகாரங்களும் இவ்விதம் அமைக்கப்பட்டிருப்பதால்தான் அவை நன்கு நீடித்து உழைத்து வேலை செய்து வருகின்றன. பல்லாயிரக் கணக்கான ஜனங்கள் தங்களுக்கு பூரண திருப்தி அளிக்கும் படியான 'வெஸ்ட் எண்டு' கெடிகாரத்தையே வாங்கி நம்பமாக உபயோகித்து வருகின்றனர். நீங்களும் ஒன்று வாங்கிக் கொள்ளுங்கள்.



**WEST END WATCH Co.**
BOMBAY CALCUTTA

வெஸ்ட் எண்டு வாட்ச் கோ.,
பம்பாய் — கல்கத்தா.




# கல்கி

மலர் 2 | தமிழ்த்திரு நாடு தன்னைப் — பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார் | இதழ் 36


# என்ன சேதி?

## இரண்டாம் முனை!

"அப்பாடா! கடைசியில் இதோ இரண்டாம் முனை ஆரம்பித்து விட்டோம்" என்று சொல்லிக்கொண்டு நேச தேசத்தினர் இத்தாலிக்குச் சொந்தமான ஸிஸிலித் தீவில் படையெடுத்து விட்டார்கள். அப்படி அவர்கள் அந்தத் தீவுக்குள் புகுந்தபோது அதிக எதிர்ப்பில்லை. அச்சு தேசத் துருப்புகள் "உள்ளே வாருங்கள், அப்புறம் உங்களை ஒரு கை பார்த்துக் கொள்கிறோம்" என்று சொல்லும் தோரணையில் பின்வாங்குகின்றன. இதன் பயனாக நேச தேசத் துருப்புகள் ஒன்றன்பின் ஒன்றாக அந்தத் தீவிலுள்ள பல ஊர்களைப் பிடித்துக் கொண்டே போகின்றன. இன்று கிட்டத்தட்ட ஸிஸிலித் தீவில் எட்டில் ஒரு பாகம் நேச தேசத்தினர் வசமிருக்கிறது. அப்படியிருந்தும் எதிரித் துருப்புகள் ஏதோ பேருக்குச் சண்டை போடுகின்றனவேயன்றி மும்மரமாக யுத்தத்தில் ஈடுபடவில்லை.

இதெல்லாம் அவர்கள் "உங்களால் பிடிக்க முடிந்ததையெல்லாம் பிடித்துக் கொள்ளுங்கள். நாங்கள் கடைசியில் என்ன செய்கிறோம், பாருங்கள்" என்று சொல்வதுபோல் இருக்கிறதல்லவா? இத்தாலியர்கள் கடைசியாக "இதோ எங்கள் நாட்டுக்கே போய்விடுகிறோம்! போய், உங்களுடைய இரண்டாவது முனையின் வண்டவாளத்தைப் பார்க்கிறோம்!" என்று ஜம்பம் பேசிக்கொண்டு இத்தாலிக்குள்ளேயே போய்விட விரும்பலாம். ஒருவேளை இந்த பேஷான யோசனைக்கு ஜெர்மன் துருப்புக்கள் குறுக்கே நின்றால்தான் நின்றது.

---

**ஐந்து ரூபாய் பரிசு:** சென்ற இதழில் வெளியான "தெரியாமற் போச்சே!" என்னும் தலைப்புள்ள காலக்ஷேபத் துணுக்குக்குப் பரிசு பெற்றவர்: ஆர். பி. சாரதி, குரோம்பேட்.

## சினிமாக் கலையின் துரதிருஷ்டம்

தென்னாட்டில் சினிமாக் கலைக்கு அரும் தொண்டு செய்த பிரமுகர்களில் ஸ்ரீ எம். டி. ராஜன் அவர்களுக்குத் தனி இடம் உண்டு. குழந்தைப் பருவத்திலிருந்த தென்னாட்டுச் சினிமாக் கலைக்கு அவர் உருவும் வளர்ச்சியும் கொடுத்தார் என்று சொல்வது மிகையாகாது. சினிமாப் படம் பிடிப்பதற்காகத் தமிழ் நாட்டுப் பட முதலாளிகள், கல்கத்தா என்றும் பம்பாய் என்றும் யாத்திரை கிளம்பிக் கொண்டிருந்த போது,



ஸ்ரீ ராஜன் வேல் பிக்சர்ஸ் ஸ்டுடியோவை ஏற்படுத்தி, தமிழ் நாட்டிலேயே நல்ல முறையில் தமிழ்ப் படம் எடுக்க முடியும் என்பதை நிரூபித்தார். பெரிய செல்வவந்தராயிருந்தும் ஸ்ரீ ராஜன் எளிய வாழ்கையையே மேற்கொண்டிருந்தார். அவர் சிறந்த மதப்பற்றும் தமிழ்ப்பற்றும் உள்ளவர்; திருப்புகழ் மணி டி. எம். கிருஷ்ணஸ்வாமி ஐயர் அவர்களின் ஆப்த நண்பர். ஸ்ரீ எம். டி. ராஜன் மறைவால் நமது சினிமாக் கலைக்குப் பெரு நஷ்டம். அவரது உற்றார் உறவினருக்கு நமது மனமார்ந்த அனுதாபத்தைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

# நிகழ்ச்சிச் சித்திரம்

-உம்மன்

பம்பாயில் கூடிய அகில இந்திய பத்திரிகாசிரியர் மகாநாட்டில் ஸர் சுல்தான் அஹமது "சர்க்கார் பிரசாரம் சத்தியத்தை அடிப்படையாகக் கொண்டது" என்று கூறினார். ஆனால், சத்தியம் என்பது மனிதர்களுக்குத் தகுந்தாற்போல் பல உருவம் எடுத்துக் கொள்கிறது. உதாரணமாக:



















இந்தியப் பத்திரிகாசிரியர் மகாநாட்டில் ஸர் சுல்தான் அஹமது பேசுகையில் பத்திரிகாசிரியரிடம் இம்மாதிரியான ஒத்துழைப்பைக் கோரினார்.
அதிகார வர்க்கம்
பத்திரிகைகள்


ஸ்ரீ கே. சீனிவாசன் பதில் சொல்லும்போது, "தென்னிந்திய சினிமாக்களுக்கு அதிக அடி வேண்டும்" என்னும் கோரிக்கையை வெளியிட்டார்.
என்ன இது?
ஸர் சுல்தான் அஹமது
?
?
?
?


ஜுறப் நின்று உண்மையிலேயே பெரிய மனிதர்தான் என்பதை ஸர் சி.பி. ராமஸ்வாமி ஐயர் சமீபத்தில் கண்டு பிடித்து வெளியிட்டு இருக்கிறார்.

# அதிகப் பிரசங்கம்

பம்பாயில் இந்த மாதம் 15உ அகில இந்தியாவிலிருந்தும் பெரிய பெரிய பத்திரிகாசிரியர்கள் வந்து மகாநாடு கூடினார்கள். இந்த மகாநாட்டுக்கு இந்திய அரசாங்கத்தின் சமாசார இலாகாத் தலைவரான ஸர் ஸுல்தான் அஹமது அழைக்கப் பெற்று விஜயமாகியிருந்தார். விஜயமானதோடு, ஓர் அதிகப் பிரசங்கமும் செய்தார்.

இந்தப் பயங்கரமான யுத்த நிலைமையிலே கூட எப்படி இந்தியாவில் பத்திரிகைகள் சுதந்திரத்துடன் நடைபெறுகின்றன என்பதை விவரித்து ஸர் ஸுல்தான் அஹமது ஆனந்தக் கண்ணீர் வடித்தார். அப்புறம் பிரசாரமுறைகளைப் பற்றியும், பிரசாரத்தில் சத்தியத்தையே கையாளுவதின் மகிமையைப் பற்றியும் சாங்கோபாங்கமாக எடுத்துரைத்தார்.

கடைசியில், இந்தியப் பத்திரிகைக்காரர்கள் தங்களுடைய தேச பக்தியைக் காட்டுவதற்கு இப்போது நேர்ந்திருக்கும் அற்புதமான சந்தர்ப்பத்தைச் சுட்டிக் காட்டினார்.

“இதோ உங்களுக்கு பேஷான சந்தர்ப்பம் கிடைத்திருக்கிறது. உங்கள் தேச பக்தியைக் காட்டவும் உங்கள் செல்வாக்கை நிரூபிக்கவும் பிரமாதமான சந்தர்ப்பம் வாய்த்திருக்கிறது. போனால் வராது; பொழுது விடிந்தால் இராது. எடுங்கள் பேனாவை! தோயுங்கள் மைக் கூட்டில்! விளாசு விளாசு என்று விளாசுங்கள்!” என்றார்.

யாரை விளாச வேண்டும் என்று கேட்டால், இந்தியாவிலே இப்போது ஏற்பட்டிருக்கும் அரிசிப் பஞ்சம் முதலியவற்றிற்குக் காரணபூதர்களாயிருப்பவர்களைத்தானாம். சாமான்களைச் சேர்த்து வைப்பவர்கள், கொள்ளை லாபம் அடிப்பவர்கள் முதலியவர்கள் தான் மேற்படி காரணபூதர்களாம். எல்லாப் பத்திரிகைகளும் சேர்ந்து ஒரு மாத காலம் அவர்களைச் சேர்ந்தாற்போல் தாக்கினால் அந்த அக்கிரமக்காரர்கள் அவமானத்தினால் தூக்குப் போட்டுக் கொண்டு சாவார்களாம். அதற்குப் பிறகு இந்தியாவில் ஒரு குறைவும் இராதாம்!! சுபிட்சம் தாண்டவமாடுமாம்!!

பத்திரிகாசிரியர்களுக்கு இதுதான் ஸர் ஸுல்தான் அஹமதின் புத்திமதி. இந்த முறையிலே பத்திரிகாசிரியர்கள் தங்களுடைய தேச பக்தியை நிரூபித்துக் காட்ட வேண்டுமாம்! மேற்படி அதிகப்பிரசங்கத்தைக் கேட்டுக்கொண்டு இந்தியாவின் பிரபல பத்திரிகாசிரியர்கள் எல்லாம் எழுந்து போகாமல் அங்கேயே உட்கார்ந்திருந்தது நமக்குச் சிறிது வியப்பாகத்தான் இருக்கிறது.

அரிசிப் பஞ்சம் முதலியவற்றிற்கு அடிப்படையான காரணம் ஸர் ஸுல்தான் அஹமது குறிப்பிடுவது அல்ல என்பது நமது அபிப்பிராயம். இந்திய சர்க்கார சரியான முறையில் திட்டம் போட்டுத் தேசத்துக்கு வேண்டிய அளவு விவசாய விளைவைப் பெருக்காததுதான் முக்கிய காரணம். இராணுவத் தேவைகளுக்காக சர்க்கார் இலாகாவில் சாமான் வாங்கும் முறை இரண்டாவது காரணம். அனாவசியமான கட்டுப்பாடு விதிகளும் அவற்றை அமுல் நடத்துவதில் உள்ள ஊழல்களும் மூன்றாவது காரணம். இதையெல்லாம் இந்தியப் பத்திரிகைகள் எடுத்து முறையிட்ட வண்ணமிருக்கின்றன. எல்லாம் செவிடன் காதில் ஊதிய சங்காகவே இருந்து வருகிறது.

இப்போது ஸர் ஸுல்தான் அஹமது பத்திரிகாசிரியர்களுக்கு அவர்களுடைய கடமையைப் பற்றிப் பிரசங்கம் செய்கிறார். அவர் குறிப்பிடும் தீமை ஓரளவு இருக்கத்தான் இருக்கிறது. அதை ஒழிக்க வேண்டியதும் அவசியந்தான். ஆனால் அது ஒன்றுதான் காரணம்போல் ஸர் ஸுல்தான் அஹமது பேசுவதும், பத்திரிகாசிரியர்களை அதைப் பற்றியே ஓயாமல் எழுதச் சொல்வதும் நகைக்கத் தக்க விஷயம். இந்தியப் பத்திரிகாசிரியர்களை அவமதிப்பது என்றே சொல்ல வேண்டும்.

* * *

இந்த யுத்த காலத்தில் இந்தியப் பத்திரிகைகளின் சுதந்திரத்தைக் கூடிய வரையில் பாதுகாப்பதற்காக நமது “ஹிந்து” பத்திரிகை ஆசிரியர் ஸ்ரீ கே. சீனிவாசன் செய்து வந்திருக்கும் முயற்சிகளை நாம் பாராட்டி நன்றி செலுத்தியிருக்கிறோம். அவருடைய தலைமையில் நடந்து வரும் அகில இந்தியப் பத்திரிகாசிரியர் மகாநாட்டின்

வேலைகளையும் பாராட்டியிருக்கிறோம். ஆனால், ஸர் ஸுல்தான் அஹமதை மகாநாட்டுக்கு விஜயம் செய்யும்படி அழைத்ததில் மேற்படி மகாநாட்டின் நிரந்தரக் கமிட்டியார் ஒரு தவறு செய்து விட்டார்கள் என்பதைக் குறிப்பிடாமல் இருக்க முடியவில்லை.

இந்தியப் பத்திரிகைகளுக்குச் சர்க்கார் எத்தனையோ சட்ட திட்டங்களையும் நிர்ப்பந்தங்களையும் விதித்திருக்கிறார்கள். அவற்றிற்கெல்லாம் கட்டுப்பட்டுத்தான் இந்தக் காலத்தில் பத்திரிகை நடத்த வேண்டியிருக்கிறது. — இது உலகமறிந்த விஷயம்.

மேற்படி கட்டுப்பாடுகளையும் நிர்ப்பந்தங்களையும் கூடுமான வரையில் விலக்கிக் கொள்வதற்காகப் பத்திரிகாசிரியர்கள் கூடுவதும், தீர்மானம் செய்வதும், சர்க்காருக்குத் தெரிவிப்பதும் நியாயமான முறைகள். இந்த மாதிரி கிளர்ச்சி செய்து கொண்டிராவிட்டால், கொஞ்சநஞ்சம் உள்ள சுதந்திரத்தையும் பறி கொடுக்க நேரிடலாம்.

ஆனால், சுதந்திரத்துக்காகக் கிளர்ச்சி செய்யும் முறை வேறு; அதற்காகச் சர்க்காருடன் உறவு கொண்டாடும் முறை வேறு.

சர்க்காருடன் உறவு கொண்டாடும் முறையை இப்போது இந்தியப் பத்திரிகைகள் கையாளக்கூடாது என்று நாம் கருதுகிறோம். முக்கியமாக, மகாத்மா காந்தியும் ஜவாஹர்லால்ஜியும் சிறையில் இருக்கும்போது இந்திய தேசியப் பத்திரிகைகள் அதிகார வர்க்கத்துடன் எவ்விதத்திலும் ஒத்துழைப்பது தேசத்தின் கௌரவத்துக்கு உகந்த காரியமாகாது.

ஸர் ஸுல்தான் அஹமதை மகாநாட்டுக்கு அழைத்த காரியம், இந்தியப் பத்திரிகாசிரியர்கள் இந்திய சர்க்காருடன் நல்லுறவு பூண்டிருக்கிறார்கள் என்பதற்கே அறிகுறியாகும். உலகம் அப்படி எண்ண நேரிடும்; இன்னும், ரேடியோ கண்ட்ரோலர் மிஸ்டர் புக்காரி, ஸர் ஸுல்தான் அஹமதுக்கு அளித்த விருந்துக்குப் பத்திரிகாசிரியர்கள் போனதும் மேற்கண்ட விதமான அபிப்பிராயம் ஏற்படுவதற்கே ஏதுவாகும்.

முக்கியமாக, ஸர் ஸுல்தான் அஹமதின் சிநேக பாவமும் புத்திமதியும் ததும்பும் பேச்சானது, உலகத்துக்கெல்லாம் இந்தியப் பத்திரிகைகளின் நிலையைப் பற்றித் தவறான அபிப்பிராயத்தையே உண்டாக்கும்.

அம்மாதிரி தவறான அபிப்பிராயம் உண்டாவதற்கு ஏற்கெனவே ஒரு தடவை நமது சகோதரப் பத்திரிகாசிரியர்கள் இடங் கொடுத்துவிட்டார்கள் என்பதை நாம் வருத்தத்துடன் குறிப்பிட வேண்டியிருக்கிறது. பிரிட்டிஷ் கவர்ன்மெண்டார் தங்களுடைய பிரசார நோக்கத்துக்காகத் துருக்கிப் பத்திரிகாசிரியர் கோஷ்டியை இந்தியாவுக்கு அனுப்பி வைத்தார்கள். அவ்விதம் வந்தவர்களை நமது சகோதரப் பத்திரிகாசிரியர்கள் வரவேற்று உபசரித்துத் தடபுடல் செய்து விட்டார்கள். அவர்கள் திரும்பிப் போய் "இந்தியா தான் பத்திரிகைக்காரர்களின் சொர்க்கம்" என்று உலகத்துக்கு அறிவித்து விட்டார்கள்.

மேற்படி பத்திரிகாசிரியர்களை வரவேற்பதில் முதன்மையாயிருந்த "ஹிந்து" ஆசிரியர் ஸ்ரீ கே. சீனிவாசன் அதன் விபரீதத்தை உணர்ந்து தமது பதில் பிரசங்கத்தில் குறிப்பிட்டிருப்பதை நாம் பாராட்டுகிறோம். இன்னும், ஸர் ஸுல்தான் அஹமதுக்கு அவர் சுடச் சுடப் பதில் சொல்லி மேற்படியாரின் பிரசங்கத்தினால் ஏற்பட்டிருக்கக் கூடிய தப்பபிப்பிராயத்தைப் போக்கவும் முயன்றிருக்கிறார். இதையும் நாம் பாராட்டுகிறோம்.

சர்க்கார் விளம்பர இலாகாவுடன் ஒத்துழைப்பதற்காக "பிரசார ஆலோசனை போர்டு" ஒன்று இந்திய சர்க்கார் ஸ்தாபிக்கப் போகிறார்களாம். அந்த ஆலோசனை போர்டில் சில பத்திரிகாசிரியர்களும் இருக்க வேண்டுமென்று அழைப்பு அனுப்பியிருந்தார்களாம். மேற்படி யோசனையைக் கைவிட்டு விடும்படி ஸ்ரீ கே. சீனிவாசன் சர்க்காருக்குக் கூறினார்.

ஸர் ஸுல்தான் அஹமது மீண்டும் பதில் சொல்லும்போது, "அதெல்லாம் கைவிட முடியாது! நீர்தானே முதன் முதலில் என்னுடைய அழைப்பை ஒப்புக்கொண்டு பதில் எழுதினீர்?" என்று கேட்டார்.

இதிலிருந்து ஸ்ரீ கே. சீனிவாசன் தமது அபிப்பிராயத்தைப் பின்னால் மாற்றிக் கொண்டிருக்கிறார் என்று தெரிய வருகிறது. இந்த விஷயத்தில் அவர் அபிப்பிராயம் மாற்றிக் கொண்டதை நாம் பெரிதும் பாராட்டுகிறோம். சர்க்கார் ஆலோசனை போர்டுகளில் தேசியப் பத்திரிகாசிரியர்கள் பதவி ஒப்புக் கொள்வது பத்திரிகை சுதந்

திரத்துக்கே கேடானது என்பது நம் கருத்து. ஏற்கெனவே, மாகாண ஆலோசனை போர்டுகளில் பெரிய பத்திரிகாசிரியர்கள் ஸ்தானம் வகித்ததினால் சின்னப் பத்திரிகைகள் ரொம்பவும் தொல்லைப்பட நேர்ந்திருக்கிறது.

எனவே, சர்க்கார் ஆலோசனை போர்டில் பத்திரிகாசிரியர்கள் பதவி வகிக்க முடியாதென்று ஸ்ரீ கே. சீனிவாசன் கூறியது ரொம்பவும் பாராட்டப் படவேண்டிய காரியம்.

ஆனால், ஸ்ரீ கே. சீனிவாசன் இவ்வளவு பேசியதன் பலனெல்லாம் ஒரு விஷயத்தினால் வியர்த்தமாய்ப் போய்விட்டதையும் நாம் குறிப்பிட வேண்டியிருக்கிறது. பத்திரிகாசிரியர் மகா நாட்டில் அவர் சம்பந்தா சம்பந்தமில்லாமல் ஸினிமா அடி நீளப் பிரச்னையைக் கொண்டு வந்து புகுத்தி யிருக்கிறார். தென்னிந்தியாவில் பட முதலாளிகள் ஸினிமா நீளக்கட்டுப்பாட்டினால் பரிதவிக்கிறார்களாம். மிஸ்டர் தாப்பர் ஐ. ஸி. எஸ். விஜயத்தினால் மேற்படி குறை தீர லாகாதா என்று தாம் ஆசைப் படுவதையும் தெரிவித்தார்.

காகிதக் கட்டுப்பாட்டு விதியினால் பத்திரிகைகள் எவ்வளவோ சுருங்கியும் மெலிந்தும் வெளியாகின்றன. தினசரிப் பத்திரிகைகள் ஓர் அணா விலைக்கு 16 பக்கங்கள் வெளியானது போக, இப்போது இரண்டணாவுக்கு நாலு பக்கமும் ஒன்றரையணாவுக்கு இரண்டு பக்கமும் வெளியாகின்றன. இதனாலெல்லாம் பத்திரிகைத் தொழிலுக்கு நேர்ந்திருக்கும் கேட்டையும், ஜனங்கள் அடைந்துவரும் நஷ்டத்தையும் பற்றி ஸ்ரீ கே. சீனிவாசன் பேசவில்லை. ஆனால் தமிழ் ஸினிமாவுக்கு நீளம் போதாது என்ற குறையை எடுத்துச் சொல்லி யிருக்கிறார். பத்திரிகாசிரியர் மகாநாட்டில் அவருடைய பெரும் பொறுப்பை இப்படி நிறைவேற்றுவார் என்று யாரும் எதிர்பார்த்திருக்க மாட்டார்கள். இந்த சம்பந்தமில்லாத விஷயத்தைப் பிரஸ்தாபிக்காமல் விட்டிருந்தால் அவருடைய பேச்சின் மதிப்பு இன்னும் உயர்வா யிருந்திருக்கும்.

---

## கேட்டுப் பாருங்கள்

● ரேடியோ நிலையங்களுக்கு ஜுலை மாதம் சூன்ய மாதம் என்று தோன்றுகிறது. முதல் இருபது நாளும் நல்ல பாட்டு கொஞ்சம் அபூர்வமாகவே இருந்தது. கடைசிப் பத்து நாளிலோ நல்ல பாட்டு குதிரைக் கொம்பா யிருக்கிறது.

22உ. திருச்சியில் காரைக்குடி சாம்பசிவய்யர் வீணை; மதுரை முத்துராஜ ஐயங்கார் கடம்.

சென்னையில் அன்று லலிதாங்கி, வஸந்த குமாரி பாட்டு.

24உ. சென்னையில் மதுரை மணி ஐயர் கச்சேரி.

25உ. சென்னையில் 8-45 க்கு ஸ்ரீமதி சுந்தரி தம்பி பாட்டு சுமாரா யிருக்கும்.

26உ. திருச்சியில் ஸ்ரீ எம். கே. தியாகராஜ பாகவதர்.

27உ. சென்னையில் பாலக்காடு ராம பாகவதர்.

29உ. திருச்சியில் கே. வி. கேசவ பாகவதர்.

30உ. திருச்சியில் பெரம்பலூர் அங்கப்பப் பிள்ளை நாதஸ்வரம்.

31உ. ஸ்ரீமதி பிருந்தா - முக்தா பாட்டும், ஸ்ரீமதி அபிராமசுந்தரியின் வயலினும்.

● ● ●

காரைக்குடி ''குமரன்'' பத்திரிகை சென்ற இருபது வருஷ காலமாகத் தமிழ் வளர்ச்சியை முதன்மையான நோக்கமாகக் கொண்டு நடந்து வருவது. இந்தப் பத்திரிகையின் ஜுலை 8உ இதழில் இசை சம்பந்தமான சில அரிய கட்டுரைகள் வெளியாகி யிருக்கின்றன.

மேற்படி இதழில் ''கல்கியைக் கேட்டுப் பாருங்கள்'' என்ற தலைப்பின் கீழ் வரும் கடிதமும் வெளியாகி யிருக்கிறது:—

ஜுலை முதல் தேதி கல்கியின் 'கேட்டுப் பாருங்கள்' தலைப்பின்கீழ், ''3உ அரியக்குடி ராமானுஜ ஐயங்கார் ஒன்றரை மணி நேரம் சக்கைப் போடு போடுகிறார்'' என்று எழுதியிருந்தது. அரியக்குடி தெலுங்குப் பாட்டுக்கு மதிப்புச் செலுத்துபவர். தமிழை முதலில் பாடினால் வாய் வேகு மென்பவர். தமிழிசை இயக்கத்தை எதிர்த்து வாதாடி நிற்கும் சங்கீத வித்வான் இவர் ஒருவர்தான். கல்கி ஒரு தமிழிசைப் பத்திரிகை. அதில் இவர் சக்கைபோடு போடுகிறாரென்று இட்டமாக எழுதியிருந்ததால் தமிழ்ப் பாட்டுப் பாட ஒப்புக்கொண்டு விட்டாராக்கும் என்று நேற்று 7-30க்கே ரேடியோ பெட்டிக்கு முன் உட்கார்ந்துவிட்டேன். 7-45க்கு வந்ததையா! வழக்கம்போல் ஒன்றன் பின் ஒன்றாகத் தெலுங்கு. சக்கைப் போடு தெலுங்கில்தான் போட்டார்.

உண்மையிலேயே கல்கிப் பத்திரிகை தமிழிசைக்கு உழைக்கிறதா, தெலுங்கிசைக்கு உழைக்கிறதா? ஆலத்தூர் சகோதரர்களையும், சாத்தூர் சுப்பிரமணியம் ஆகியவர்களைப் பற்றியும் இப்படித்தான் 'கேட்டுப்பாருங்க'ளில் வருகிறது. அவர்களும தெலுங்குப் பாட்டுக்களைத்தான் சக்கைப் போடு போடுகிறார்கள்; அல்லது ஜமாய்க்கிறார்கள்! இவர்கள் ஒன்று தமிழிசையை ஆதரிக்க வேண்டும். அல்லது இவர்களைப் பற்றித் தமிழிசைப் பத்திரிகைகள் புகழ்வதைச் சிறிது அடக்கிக் கொள்ள

வேண்டும். கல்கி தமிழிசைப் பத்திரிகையாக இருந்தும் இப்படி இவர்களைப் புகழ்வதில் வேறு எண்ணங்கள் கிளம்புகின்றன.

ராம - அருணாசலம் செட்டியார்.

இதுதான் கடிதம். இதன் கீழே "குமரன்" ஆசிரியர் அழகான குறிப்பு ஒன்று தக்க முறையில் எழுதியிருக்கிறார். நான் என்னுடைய பதிலை இங்கே தருகிறேன் :—

● இந்தக் 'கேட்டுப் பாருங்கள்' என்ற பத்தியானது தமிழிசைக் கச்சேரிகளை மட்டும் வெளியிடுவதற்காக ஏற்படுத்தப்படவில்லை. இதை ரேடியோ நிலையங்களைப் பற்றிய செய்திப் பத்தியாகவே நடத்தி வருகிறோம். தமிழிசையாயிருந்தாலும், தெலுங்கிசையாயிருந்தாலும், சுமாராக நல்ல பாட்டாயிருக்கக்கூடியதை வெளியிடுகிறோம். யாராவது தமிழிசையாகப் பாடினால் அதை விசேஷமாகக் குறிப்பிடுகிறோம்.

ஸ்ரீ அரியக்குடி ராமானுஜ ஐயங்காருக்குத் தமிழிசை மேல் கோபம் என்பது எல்லாருக்கும் தெரிந்த விஷயமே. ஆகையால் அவர் "சக்கைப் போடு போடுவார்" என்றால், தமிழிசையைச் சக்கைப் போடு போடப் போகிறார் என்று யாருமே சந்தேகிப்பதற்கு இடமில்லை. "வழக்கமான ஒன்றே கால் மணிக்குப் பதில் ஒன்றரை மணி சக்கைப் போடு போடுகிறார்!" என்ற பொருளில்தான் எடுத்துக்கொள்ள வேண்டும்.

மேலும், ஸ்ரீ அய்யங்காரிடம் தமிழ் இசையைக் கேட்டுத்தான் ஆக வேண்டும் என்ற அபார விருப்பம் இப்போதெல்லாம் எனக்குக் கிடையாது. சில மாதங்களுக்கு முன்னால், அய்யங்கார் ரேடியோவில், "காலைத் தூக்கி நின்று" என்னும் அழகான தமிழ்ப் பதத்தைப் பிரமாதமான துரித காலத்தில் பின் வரும் முறையில் பாடினார் :—

"காலைத் தூக்கி நின்று ஆடும் தெய்வமே<br>
காலைத் தூக்கி நின்று ஆடும் தெய்வமே<br>
—என்னைக்<br>
காலைத் தூக்கி நின்று ஆடும் தெய்வமே!"

தமிழ் ஸாஹித்யத்தின் அழகை இவ்வளவு நன்றாக அறிந்து பாடுகிறவரிடம் தமிழ்ப் பாட்டைக் கேட்டுத்தான் ஆக வேண்டும் என்று நாம் கவலைப் பட வேண்டியதில்லை.

அய்யங்கார் தமிழ்நாட்டில் இப்போதுள்ள முதன்மையான ஸங்கீத வித்வான். இதை யாரும் மறுக்க முடியாது. இந்த வித்வத் யோக்யதையுடன் அவர் தமிழ்ப் பாட்டுக்களும் அதிகம் பாடினால் தமிழ் மக்களைக் கௌரவித்தவராவார்; தமக்கும் கௌரவத்தைத் தேடிக் கொண்டவராவார்.

மற்றப்படி, அவர் தமிழ் பாடாவிட்டால் நமக்கு ஒன்றும் நஷ்டம் இல்லை; குடி முழுகிப் போய் விடாது.

● ஆலத்தூர், சாத்தூர் இவர்கள் விஷயத்தில் எனக்கு ஓரளவு நம்பிக்கை இருக்கிறது. நான் அறிந்தவரையில், இவர்கள் இப்போதெல்லாம் ஓரளவு தமிழ்ப் பாட்டுக்களையும் கலந்து பாடி வருகிறார்கள். இன்னும் அதிகமாக இவர்கள் தமிழிசையில் ஊக்கம் கொள்ளச் செய்வது, தமிழிசை ரஸிகர்களின் ஊக்கத்தையே பொறுத்திருக்கிறது.

ஆலத்தூர் சகோதரர்கள் தெலுங்கைத் தாய் பாஷையாகக்கொண்டவர்கள். எனவே, தமிழிசையில் அவர்களுக்கு இயற்கையான ஊக்கம் இருக்குமென்று எதிர்பார்ப்பதற்கு இல்லை. அவர்களைக் கச்சேரிக்கு அமர்த்துகிறவர்களும், சபையோரும் தமிழிசையில் காட்டும் ஊக்கந்தான் அவர்களுடைய கச்சேரியிலும் பிரதிபலிக்கக் கூடும்.

● தமிழ்மக்களிடையே தமிழிசை ஊக்கம் எவ்வளவோ கொந்தளித்துக் கொண்டிருக்கிறது. ஆனால் அதை இன்னும் சரியாக உபயோகப்படுத்தவில்லை. தெலுங்கு இசைக்காரர்கள் சமயம் பார்த்து, "அந்தக் கீர்த்தனத்தைப் பாடுங்கள்; இந்த ஜாவளியைப் பாடுங்கள்" என்று வித்வான்களிடம் கேட்டுக் காரியத்தைச் சாதித்துக் கொள்கிறார்கள். தமிழ் இசைக்காரர்கள் தங்களுடைய தமிழ் இசை ஆர்வத்தை மனதிற்குள்ளேயே வைத்துக் கொண்டிருக்கிறார்கள். அவர்களுடைய ஆர்வத்தை நன்கு வெளிப்படுத்தினால்தான் வித்வான்களும் தமிழிசையில் ஊக்கம் கொள்ளக் கூடும்.

ரேடியோ நிலையங்கள் இரண்டும் தமிழிசை விஷயத்தில் "பழைய பெத்தானே பெத்தான்" என்று ஆகிக்கொண்டு வருகின்றன. இதற்கும் தமிழிசைக்காரர்கள் பலமான கிளர்ச்சி செய்ய வேண்டும்.

## குறிப்பு

சென்ற இதழில் வெளியான இசைத் தட்டு விமரிசனத்தில், "நகைப் பைத்யம் எதுக்குலாம் போதிலும் நனவிலும் கனவிலும் இதே சிந்தையா?" என்பதைப் பற்றிக் குறிப்பிட்டிருந்தது.

அந்த வரியின் பொருள் பின் வருமாறு என்று நமக்கு அறிவிக்கப்படுகிறது :—"நகைப் பைத்தியம் எதுக்கு? (எதற்கு?) உலாம்போதிலும் (உலாவும் வேளையிலும்) நனவிலும் கனவிலும் இதே எண்ணமா?"

[ராகப் பெயரைச் சிலேடையாகக் குறிப்பிடுவதற்காக 'எதற்கு' என்பது 'எதுக்கு' என்று மருவியது.]

---

# இது இல்லை!



பஸ் பிரயாணி :—"கண்டக்டர்! திருவல்லிக்கேணி இதுதானே?"

கண்டக்டர் (திரும்பிப் பார்க்காமல்) :— "இல்லை, ஸார்! இது என் முதுகு!"

★ ஸினிமா கீன விவாதத்திலிருந்து ஜனித்த தமிழிசை விவாதத்தைப் பற்றி இந்த இதழில் "தமிழ் மகன்" தமது மூன்றாவது கட்டுரையை எழுதி முடிக்கிறார். விவாதம் வளர்ந்தால் மேலும் எழுதுவார்.

# பாலநாகம்மாவும் தமிழ் இசையும்

"தமிழ் மகன்"

**பா**லநாகம்மாவை முன்னால் நிறுத்திக் கொண்டு ஸ்ரீ எஸ். எஸ். வாஸன் தமிழிசையைத் தாக்குகிறார் என்று என் முதல் கட்டுரையில் நான் சொல்லியிருந்தேன். "இது அபாண்டம்; நான் அப்படிப் பேசவேயில்லை" என்று ஸ்ரீ எஸ். எஸ். வாஸன் உபயகுசலோபரியில் முறையிட்டிருக்கிறார். அவர் பேசியதாக அவர் வெளியிட்டிருப்பதையே கொஞ்சம் கேளுங்கள் :—

"தமிழர்கள் மகா ரஸிகர்கள். அவர்கள் கலை எந்த இடத்தில் எந்த பாஷையில் இருந்தாலும் ரஸிக்கத் தயங்க மாட்டார்கள். அதற்கு இந்த பாலநாகம்மாவை ஒரு உதாரணமாகச் சொல்லலாம். ரஸிகளைப் பார்த்து நீ இன்னதுதான் ரஸிக்கவேண்டும், இன்னதை ரஸிக்கக் கூடாது என்று சொல்வது சரியல்ல."

மேற்கண்ட விதம் பேசியதாக அவரே தெரியப்படுத்தி யிருக்கிறார்.

ஸ்ரீ எஸ். எஸ். வாஸன் எதைப் பற்றிப் பேசியிருக்கிறார்? ஏதாவது உங்களுக்குத் தெரிகிறதா?

பாலநாகம்மாவை ரஸிக்கக்கூடாது என்று யாராவது சொன்னார்களா? இல்லையே? பின், எதைப் பற்றிப் பேசுகிறார்?

அவர் தமிழ் இசை இயக்கத்தைப் பற்றிப் பேசுவதாகவே எனக்குத் தோன்றுகிறது. "இல்லை, அபாண்டம்!" என்று அலறுகிறார், ஸ்ரீ எஸ். எஸ். வாஸன். அப்படியானால், கலை — பாஷை என்று சொல்வதெல்லாம் எதைக் குறித்து?

போனது போகட்டும். இப்போதுதான் அவர் தெளிவாகச் சொல்லட்டுமே?

(1) தமிழிசை இயக்கத்தை அவர் ஆதரிக்கிறாரா, எதிர்க்கிறாரா?

(2) நமது சங்கீத வித்வான்கள் கச்சேரிகளில் தமிழ்ப் பாட்டுக்கள் பாடவேண்டுமா? வேண்டாமா?

(3) ரஸிகர்களைப் பார்த்து நீ இன்னது தான் ரஸிக்க வேண்டும், இன்னதை ரஸிக்கக் கூடாதென்று யார் சொல்கிறார்கள்? எதற்காகச் சொல்கிறார்கள்?

கலையையும் பாஷையையும் பற்றி ஸ்ரீ எஸ். எஸ். வாஸனைக் காட்டிலும் பெரியவர்கள் சிலர் அபிப்பிராயம் வெளியிட்டதுண்டு.

உதாரணமாக, பாரதியார் இருந்திருக்கிறார். அவர் "எட்டுத் திசையிலும் சென்று தாய் மொழியில் கலைச் செல்வங்களைக் கொண்டு சேருங்கள்" என்று சொல்லி யிருக்கிறார். இன்னும், "அர்த்தம் தெரியாத தெலுங்கில் கேட்ட பாட்டுக்களையே திரும்பத் திரும்பக் கேட்டுக் கொண்டிருக்கிறோமே? நமக்கெல்லாம் இரும்புக் காதா?" என்று கேட்டிருக்கிறார்.

மகாகவி டாகூர், "தாய் பாஷையிலே தான் கலைகளை அநுபவிக்க முடியும்" என்று அழுத்தமாய்ச் சொல்லி யிருக்கிறார்.

இவர்களுடைய அபிப்பிராயங்களை யெல்லாம் தள்ளிவிட்டு கலையையும் பாஷையையும் பற்றி ஸ்ரீ எஸ். எஸ். வாஸன் அபிப்பிராயத்தை ஒப்புக் கொள்ளத் தமிழ் மக்கள் தயாராயில்லை.

தாய் பாஷையை துவேஷிக்கும் அதிசயப் பிரபுக்களைப் பார்த்துத் தமிழ் மக்கள் இரக்கப் படுவார்கள்! அவர்களிடம் ரஸிகத் தன்மையில் பாடல் கேட்க வரமாட்டார்கள்!

பாஷை வேண்டிய கலை எது, பாஷை அவசிய மில்லாத கலை எது என்று தமிழ் மக்களுக்குத் தெரியும்.

பாலநாகம்மா கலைக்குப் பாஷை வேண்டிய தில்லை யென்று அவர்களுக்குத் தெரியும். அது போலவே, "சங்கீதக் கலையில் சாஹித்யமும் ஒரு முக்கியமான அம்சம் — அதற்கு பாஷை அவசியம்" என்பதும் தமிழர்களுக்குத் தெரியும்.

பாஷை அவசியம் என்று ஏற்படும்போது, தாய்மொழிதான் சௌக்யமானது என்றும் அவர்கள் அறிவார்கள்.

பிற பாஷைப் பாட்டுக்களை அவர்கள் துவேஷிக்க மாட்டார்கள்; ஆனால், தாய் மொழியில் பாட்டுக்கள் வேண்டுமென்று நிச்சயம் கேட்பார்கள்.

தம்மைப்பற்றி ஸ்ரீ எஸ். எஸ். வாஸன் எழுதி யிருப்பதில் "தமிழ்நாட்டில் பிறந்து பதினாறு வருஷங்களாகத் தமிழர்களுக் கென்றே ஒரு தமிழ்ப் பத்திரிகையை நடத்தி வருபவர் ........." என்று குறிப்பிட்டுக் கொண்டிருக்கிறார்.

"நாம் எல்லோருந்தானே தமிழ்நாட்டில் பிறந்தவர்கள்? ஸ்ரீ எஸ். எஸ். வாஸன் தமிழ் நாட்டில் பிறந்ததில் என்ன அவ்வளவு விசேஷம்?" என்று முதலில் தோன்றியது. அப்புறம் வடநாட்டில் பிறந்து வளர்ந்து வந்த ஒருவரும் தமிழ்நாட்டில் ஒரு தமிழ்த் தினசரியை நடத்துகிறார் அல்லவா என்பது நினைவு வந்தது. "நான் அப்படி அல்ல; தமிழ்நாட்டிலேயே பிறந்தவன்" என்று ஸ்ரீ வாஸன் ஞாபக மூட்டுகிறார் போலிருக்கிறது.

ஆனால் "பதினாறு வருஷங்களாகத் தமிழர் களுக்கென்றே ஒரு தமிழ்ப் பத்திரிகையை நடத்தி" 'வருவதில் நிச்சயமாக ஒரு விசேஷமும் இல்லை. தமிழ்ப் பத்திரிகையைத் தெலுங்கர்களுக்காக நடத்த முடியாது! தெலுங்குப் பத்திரிகையைத் தமிழர்களுக்காக நடத்தவும் முடியாது!

ஒரு தெலுங்குப் பத்திரிகையைத் தெலுங் கர்களுக்காக ஸ்ரீ எஸ். எஸ். வாஸன் நடத்திப் பார்த்தார். ஓர் இங்கிலீஷ் பத்திரிகையை யாருக்காகவோ நடத்தியும் பார்த்தார். அதெல்லாம் நடக்காததினால் நிறுத்திவிட் டாரே தவிர, தமிழர்களின் மேல் உள்ள அன்பினால் நிறுத்தி விடவில்லை!

ஸ்ரீ வாஸன் நடத்தும் தமிழ்ப் பத்திரிகை ஒரு காலத்தில் தமிழ் மக்களின் அன்பைக் கவர்ந்திருந்தது. இதற்குக் காரணம் அந்தக் காலத்தில் ஆனந்த விகடன் தமிழ் மொழிக்குச் செய்து வந்த தொண்டுதான்.

தமிழ் மொழிக்குத் தொண்டு செய்த காலத்தில் தமிழிசையை ஆதரித்து எத்தனையோ கட்டுரைகள் ஆ. வி. யில் வெளியாகி யிருக்கிறது. அதே ஆ. வி. யில் 27—6—43 இதழில் வெளியாகி யிருக்கும் கதையைக் கேளுங்கள்.



...... படத்தில் உள்ள சங்கீத வித்வானுக்கு மூத்தண்ணனுக்களா யிருக்க வேண்டும்!

யாரோ ஒரு முட்டாள் இந்த ஆனந்த விகடன் ரஸிகரிடம் வந்து, தானே கன்னத் தில் போட்டுக் கொண்டானாம். "ஏன்?" என்று கேட்டதற்கு, "தமிழ்ப் பாட்டை நான் ஆதரித்தது தப்பு; அதை பால நாகம்மாவின் மூலம் உணர்ந்தேன்!" என்றானாம்.

ஸ்ரீ எஸ். எஸ். வாஸனும் பாலநாகம்மாவின் மூலம் மேற்படி உண்மையைக் கண்டதாகச் சொல்கிறபடியால் அவர்தான் ஒருவேளை ஆ. வி. ரஸிகரிடம் அப்படிக் கன்னத்தில் போட்டுக் கொண்டாரோ என்ற சந்தேகம் உண்டாகிறது.

இது மட்டுமா? இன்னும் பல சங்கீத வித்வான்களும் இந்த ஆ. வி. ரஸிகரிடம் வந்து "நாங்கள் தமிழ்ப் பாட்டுப் பாடியது தப்பு!" என்று ஒப்புக் கொண் டார்களாம்.

ஒன்று இதெல்லாமே 'பொய் — புளி சுருட்டு — பித்தலாட்டக் கலை'யில் சேர்ந்ததா யிருக்க வேண்டும். அல்லது உண்மையாக நடந்திருக்குமானால், அப்படி வந்து சொன்ன வித்வான்கள் இதோ படத்தில் உள்ள சங்கீத வித்வானுக்கு மூத்தண்ணனுக்களா யிருக்க வேண்டும்! இவர்களுடைய குரலைக் கேட்டு விட்டுச் சபையோர் விரட்டி யடித்திருப் பார்கள். அதை அவர்கள் தமிழ்ப் பாட்டின் பேரில் சுமத்தி யிருக்க வேண்டும்.

இப்படிப்பட்ட ஆ. வி. ஆசிரியர் ரஸிக்கும் வித்வான்கள் தமிழ்ப் பாட்டுப் பாடாமலிருப்பதே நலம். அவர்கள் தமிழ்ப் பாட்டுப் பாடியது பிசகுதான்!

"தமிழ்நாட்டில் பிறந்தவர்" என்று சொல்லிக் கொள்ளும் ஸ்ரீ எஸ். எஸ். வாஸன் தமிழ் நாட்டில் தமிழராகப் பிறந்து விட்டுத் தமிழுக்கு விரோதமாக மேற்கண்டவாறு துஷ் பிரசாரம் செய்தல் எவ்வளவு தீமையான செயல் என்பதை உணராதது மிகவும் ஆச்சரியமான விஷயம்.

ஒரு காலத்தில் தமிழ் மக்களின் அபிமானத்துக்குப் பாத்திரமாயிருந்த 'ஆனந்த விகடன்' அதிவிரைவாக 'ஆனந்தக் கடன்' என்று பெயர் பெறும் நிலைமையை அடைந்து வருவது பெரிதும் வருத்தப்பட வேண்டிய காரியம்.

தமிழ் மக்களுக்கு ஸ்ரீ எஸ். எஸ். வாஸன் வேறு ஒரு தொண்டும் செய்யா விட்டாலும், ஆ. வி. யின் பழைய கொள்கைக்கு மாறாகத் தமிழிசையை எதிர்க்காமலிருந்தாலே பெரிய புண்ணியமாயிருக்குமென்று தெரிவித்துக் கொள்கிறேன். அப்புறம், அவருடைய இஷ்டம்.

# அக்குப் போர்

● சென்னையில் அரிசி பங்கீடு செய்வதற்காக ஒவ்வொரு வீட்டுக்காரரையும் விசாரித்துப் புள்ளி விவரங்கள் தயாரிக்கிறார்கள். இதற்காகக் கொடுக்கப்படும் ஃபாரத்தில் "அரிசி இல்லாவிட்டால் உங்களுக்குக் கேழ்வரகு, கம்பு, சோளம், இது மூன்றுக்குள் எது வேண்டும்?" என்று ஒரு கேள்வி இருக்கிறது!

"இரண்டு முழம் மணிக் கயிறு வேண்டும்" என்று பதில் எழுதலாமா என்று ஒருவர் கேட்கிறார்.

★

அரிசிக்குப் பதிலாகக் கம்பு உபயோகிப்பதைப் பற்றிச் செங்கற்பட்டு ஜில்லாவில் சர்க்கார் பிரசாரம் செய்யப் போகிறார்கள். அடையாற்றில் கூட ஸ்ரீ அருண்டேல் தலைமையின் கீழ் ஒரு கம்புப் பிரசாரக் கூட்டம் நடைபெற்றது. அதில் கம்பிலிருந்து பல தின்பண்டங்கள் தயாரித்து, வந்தவர்களுக்கு விநியோகித்தார்களாம். அச்சமயம்,

"கம்பைக்குத்தடி, களியைக்கிண்டடி"

என்ற பழைய பாட்டைப் பாடி கலாக்ஷேத்திர கோஷ்டியார் அபிநயம் பிடித்தார்களா வென்று தெரியவில்லை.

★

"14,000 அடியில் படம் பிடிப்பதை விட 11,000 அடியில் படம் பிடித்தால் ஆபாஸக் காட்சிகள் சற்றுக் குறையலாம்" என்று பொது ஜனங்கள் அபிப்பிராயப்படுகிறார்களல்லவா? இதைக் கேட்ட ஒன்றிரண்டு பட முதலாளிகள், "அப்படியா சங்கதி! ஒரு அடியில் படம் பிடித்தால் கூட அதை ஆபாஸமாக்கும் பகுத்தறிவு எங்களுக்குண்டு" என்று மார்தட்டிக் கூறியதாகக் கிளம்பியிருக்கும் வதந்திக்கு ஆதாரமில்லை யென்று நம்புகிறேன்.

★

பிலிம் பிரசார இலாகாவைச் சேர்ந்த ஸ்ரீ தப்பர் சென்னைக்கு வந்திருந்தபோது பிலிம் வர்த்தக சபைக் கூட்டம் ஒன்றுக்குப் போயிருந்தார். அங்கே, "தமிழ்ப் படங்களை 14,000 அடியில் பிடிக்காவிட்டால் தமிழ்ப் படத் தொழில் நசித்துப் போய்விடும்" என்பதற்குள்ள வாதங்களைப் பல மணி நேரம் கேட்டுக் கொண்டிருந்தார். அப்பொழுது அவர் அந்த வாதங்களை மிகவும் மரியாதையுடனும் பொறுமையுடனும் கேட்டுக் கொண்டிருந்ததற்காக ஸினிமா வர்த்தகச் சங்கத்தின் சார்பாய் வந்தனம் கூறப்பட்டதாம்.

மேற்படி வாதங்களின் போக்கைக் கேட்டும் கோபமும் பயித்தியமும் பிடிக்காமல் பொறுமையாகவும் மரியாதையாகவும் இருந்ததற்காக அவருக்கு 'பிலிம் மகாத்மா' என்ற பட்டம் கொடுக்கலாமென்று சிபார்சு செய்கிறேன்.

★

ஜப்பான் ஸயாமுக்கு இப்பொழுது மலேயாவிலிருந்தும் பர்மாவிலிருந்தும் எட்டு மாகாணங்களைத் தானஞ் செய்திருக்கிறதாம். இந்தத் தானத்தை பிரிட்டிஷ் சர்க்கார் ஒப்புக்கொள்ளப் போவதில்லை யென்று ஈடன் கூறுகிறார். லண்டனிலுள்ள சுதந்திர ஸயாம் கமிட்டித் தலைவரும் அவரை ஆமோதிக்கிறார்.

யுத்தம், நேச தேசங்களுக்கு வெற்றிகரமாக முடிந்ததும் இந்த எட்டு மாகாணங்களைத் தானம் வாங்கியதற்குப் பிராயச்சித்தமாக பிரிட்டிஷார் ஸயாமையே தானமாக எடுத்துக் கொண்டு விட வேண்டியதுதான்.

★

"நான் இந்தியாவில் சில வருஷங்கள் சுகமாகக் காலங் கழித்திருக்கிறேன். அந்தக் கடனை நான் தீர்க்க ஆசைப்படுகிறேன்" என்று வேவல் பிரபு கூறுகிறார்.

சர்ச்சில் துரை இந்தியாவில் பங்களூர், வடமேற்கு எல்லைப்புறம் முதலிய இடங்களில் நம்மிடமிருந்து சம்பளம் வாங்கிக்கொண்டு வேலை பார்த்தவர். கர்னல் அமெரி கோரக்பூரில் பிறந்து வளர்ந்தவர். இவர்கள் இந்தியாவுக்குத் தங்கள் கடனைத் தீர்க்கும் முறையைப் பார்க்கும்போது, வேவல் பிரபு சும்மா இருந்தால் போதுமென்று தோன்றுகிறது!

★

வேவல் பிரபுவுக்குக் கவி கட்டுவதில் பயிற்சியுண்டு. அவர் ஓர் அமெரிக்கப் பத்திரிகைக்கு எழுதிய பாட்டை 'மொழி பெயர்த்து'த் தந்திருக்கிறேன்:—

"நான் ஒற்றைக் கண்ணனென்பது
உண்மைதான்
எந்தன் மெய் காவலரும்
அங்ஙனமேதான்
எனவே, அவர் கீழ்த்திசை நோக்க,
நான் மேற்றிசை நோக்கி
உண்மையை யறிவோம்
ஒன்றில்லாமல் பாக்கி."

இந்தக் கவி எந்த யாப்பிலக்கண சூத்திரத்துக்காவது ஒத்து வருகிறதா யிருந்தால் தயவு செய்து தெரியப்படுத்தவும். பிறகு, பாட்டுக் கட்டுவதையே நிறுத்தி விடுகிறேன்.—"காசி"

# மீரா



## எம். எஸ். சுப்புலக்ஷ்மி

சித்தூர் நாகையா, செருகளத்தூர் சாமா, என். எஸ். கிருஷ்ணன் டி. ஏ. மதுரம்
— கே. சாரங்கபாணி, டி. எஸ். பாலையா, பேபி ராதா —
முதலியோர் நடிப்பது



டைரக்ஷன் : **எல்லிஸ் R. டங்கன்**



## சந்திர பிரபா ஸினிடோன்
## நியூடோன் ஸ்டுடியோ



**தயாரிப்பு**

---

மதராஸ் ஸிடி, செங்கல்பட்டு, வட ஆற்காடு,
தென் ஆற்காடு, சேலம், திருச்சி ஜில்லாக்களுக்கு

**பூரண உரிமையாளர்கள் :**

### நியூடோன் ஸ்டுடியோஸ் லிமிடெட்.,
கீழ்ப்பாக்கம் :: மதராஸ்

---

ஸிலோன், தஞ்சாவூர், மதுரை, ராமனாதபுரம், திருநெல்வேலி, கோயமுத்தூர், சித்தூர் ஜில்லாக்கள், புதுக்கோட்டை, திருவாங்கூர், கொச்சி மைசூர், ஹைதராபாத் சமஸ்தானங்கள், பெங்களூர், மலபார், ஆந்திரா ஜில்லாக்கள், நீலகிரி, கூர்க், வட இந்தியா முதலிய இடங்களுக்கு

**பூரண உரிமையாளர்கள் :**

### சந்திர பிரபா ஸினிடோன்,
கீழ்ப்பாக்கம் :: மதராஸ்

# "மித்திரன்" ஆசிரியர் துக்கம்

"கல்கி"

ஒரு நல்ல முகூர்த்த தினத்தில் "சுதேசமித்திரன்" ஆசிரியர் அன்புடன் என்னைப் பற்றிப் பேசி யிருக்கிறார். அந்தப் பேச்சு இந்தக் காகித கிராக்கி காலத்தில் ஏறக் குறைய முக்கால் பத்தி "சுதேசமித்திரன்" பத்திரிகையில் வெளியாகி யிருக்கிறது.

எனக்கு "விசேஷ யோக்யதை இருக்கிறது" என்றும், "தெய்வீக சக்தி கொண்டு தெளிவாக விஷயங்களை விளக்கிக் கூறும் வல்லமையுள்ள கல்கியின் கட்டுரையை நான் படித்து மகிழ்ந்ததுண்டு" என்றும் தமிழ்ப் பத்திரிகாசிரியர்களின் மூத்த சகோதரர் கூறியிருப்பதைக் கிடைத்தற்கரிய ஆசீர்வாதமாகக் கொண்டு நன்றி செலுத்துகிறேன்.

"இது கலிகாலம். கல்கி அவதாரமெடுத்திருக்கிறார்" என்று ஸ்ரீ வி. ஆர். ஸ்ரீனிவாஸன் பேச்சை ஆரம்பித்திருக்கிறார். கலியுகத்தில் கண்கண்ட தெய்வமான திருப்பதி ஸ்ரீனிவாசப் பெருமானே மலையிலிருந்து இறங்கி வந்து உலக சம்ரக்ஷணார்த்தம் "சுதேசமித்திரன்" பத்திரிகையை நடத்தி வரும் போது, பவிஷ்யத் புராணத்தில் சொல்லியிருக்கும் காலத்துக்குச் சற்று முன்னாலேயே கல்கி அவசரப்பட்டு அவதாரம் எடுத்து விட்டால் ஆச்சரியப்படுவதற்கில்லை! அந்தப் பத்தாவது அவதாரத்தின் பெயரை நான் முன் கூட்டியே வைத்துக் கொண்டதிலும் வியப்படைவதற்கில்லை.

ஆனால் எனக்காக ஸ்ரீ வி. ஆர். ஸ்ரீனிவாசன் துக்கப்படும்படி நேர்ந்ததற்காக நான் மிகவும் வருத்தப்படுகிறேன்.

அவருடைய துக்கத்துக்குக் காரணம் நான் என்னுடைய எழுத்து சக்தியை துஷ்பிரயோகம் செய்கிறேன் என்பதுதான். 'நாயாதிக் காய்ச்ச'லினால் அதாவது ஸ்ரீ எஸ். எஸ். வாஸன் மேலுள்ள விரோதத்தினால் என் மனம் தவறான வழியில் போவதாக அவர் அபிப்பிராயப்பட்டிருக்கிறார்.

"ஸ்ரீ வாஸனுக்கும் கல்கிக்கும் முன்பு பரிமளித்த அன்பின் அளவுதான் இன்று ஏற்பட்டுள்ள விரோதத்தின் பரிமாணம்" என்று ஸ்ரீ வி. ஆர். ஸ்ரீனிவாசன் கூறியிருக்கிறார்.

நான் 'உதிப்பதற்கு முன்பிருந்தே' சேவை செய்து வரும் முதிர்ந்த தமிழ்த் தினசரியின் ஆசிரியர் இவ்விதம் சொந்த விஷயங்களைக் கொண்டு வந்து விவாதத்தில் புகுத்துவது எனக்கு மிகுந்த துக்கத்தை அளிக்கிறது. ஸ்ரீ வி. ஆர். ஸ்ரீனிவாசனே இவ்விதம் வழி காட்டுவதென்றால், தமிழ்ப் பத்திரிகை உலகின் துரதிர்ஷ்டம் என்றுதான் சொல்ல வேண்டும்.

உண்மையில், ஸ்ரீ வாஸனிடம் நான் அபார அன்பு கொண்டதுமில்லை; இப்போது விரோதம் கொண்டிருக்கவும் இல்லை.

ஸ்ரீ எஸ். எஸ். வாஸனிடம் எனக்கு முன்னம் மதிப்பு இருந்தது; இப்போது இல்லை. அதற்கு அவருடைய செய்கைகள் தான் காரணம்.

ஆனால் இந்த என் மனோ நிலைக்கும், பிரஸ்தாப விவாதத்துக்கும் யாதொரு சம்பந்தமுமில்லை. சொந்த நன்மை தீமைகளையோ, விருப்பு வெறுப்புகளையோ பொது விவாதத்தில் கலக்கும் வழக்கத்தை நான் அடியோடு வெறுக்கிறேன்.

ஸ்ரீ வாஸன் மேலுள்ள விரோதத்தினால் "தமிழ் மகன்" கட்டுரையை வெளியிட்டேன் என்று ஸ்ரீ வி. ஆர். ஸ்ரீனிவாசன் சொல்வது எவ்வளவு பொருத்தமற்றது என்பதை நிரூபிக்க இரண்டு உதாரணங்கள் கூற விரும்புகிறேன் :—

(1) நமது சங்கீதக் கச்சேரிகளில் தமிழ் ஸாஹித்யங்கள் அதிகமாய்ப் பாடப்பட வேண்டும் என்ற கட்சியைச் சென்ற பத்து வருஷமாக நான் ஆதரித்து வந்திருக்கிறேன். ஆனந்த விகடனிலேயே ஏழு வருஷம் இடைவிடாது எழுதி யிருக்கிறேன்.

ஸ்ரீ எஸ். எஸ். வாஸன் அதைப் பற்றி இப்போது மாறுபட்ட அபிப்பிராயத்தை வெளியிட்டு வருகிறார். "கலைக்கு எந்த பாஷையாயிருந்தால் என்ன?" என்கிறார்.

ஸ்ரீ எஸ். எஸ். வாஸன் மேலுள்ள விரோதத்தினால் நான் தமிழிசையை ஆதரிக்கிறேன் என்று சு. மி. ஆசிரியர் சொல்வாரா? அல்லது "என் மேலுள்ள விரோதத்தினால்

ஸ்ரீ எஸ். எஸ். வாஸன் தமிழிசையை எதிர்க்கிறார்" என்று நான் சொன்னால், அதைத்தான் அவர் ஒப்புக் கொள்வாரா?

(2) "கல்கி" பத்திரிகையின் ஆரம்ப காலத்திலேயே "காங்கிரஸ் திட்டம் மாறவேண்டும்" என்ற கருத்தை நான் வெளியிட்டேன். பிற்பாடு "பாகிஸ்தான் உரிமையைக் கொடுத்தாவது முஸ்லிம் லீக்குடன், காங்கிரஸ் ஒற்றுமைப்படவேண்டும்" என்ற கொள்கையை நான் ஆதரித்தேன். தேசத்தில் இதற்கு ரொம்ப விரோதமுண்டு என்று தெரிந்திருந்தும், "இந்தியா விடுதலையடைய இச்சமயம் வேறு வழி கிடையாது" என்று நிச்சயமாக நம்பியபடியினாலேயே மேற்படி கொள்கைகளைப் பலமாக ஆதரித்து எழுதினேன். ஒருவாறு அக்கொள்கைகளைச் "சுதேசமித்திரன்" பத்திரிகையும் ஆதரித்தது.

ஆனால், ஸ்ரீ எஸ். எஸ். வாஸன் தமது பத்திரிகையில் மேற்படி இரு கொள்கைகளுக்கும் விரோதமாக எழுதினார். பாகிஸ்தானையும், ராஜாஜியையும் சக்கைப் போடு போட்டார்.

"கல்கி" பேரிலும் "சு. மி." பேரிலும் உள்ள விரோதத்தினால் ஸ்ரீ எஸ். எஸ். வாஸன் அப்படி எழுதினார் என்றோ, அல்லது அவர் பேரில் உள்ள விரோதத்தினால் நாங்கள் அவருக்கு மாறாக எழுதினோம் என்றோ சொல்ல முடியுமா?

பின்னர், இந்தப் பட நீளப் பூசலில் மட்டும் ஸ்ரீ எஸ். எஸ். வாஸன் மேலுள்ள விரோதத்தினால் நான் 11000 அடிக் கட்சியை ஆதரிக்கிறேன் என்று சு. மி. ஆசிரியர் ஏன் கருதுகிறார்? — யாராவது அவரிடம் அவ்விதம் தெரிவித்திருந்தாலும், அல்லது அவரே அத்தகைய முடிவுக்கு வந்திருந்தாலும், அது ரொம்பவும் பிசகான அபிப்பிராயம் என்பதைத் தாழ்மையுடன் தெரிவித்துக் கொள்கிறேன்.

தமிழிசையை நான் வெகு காலமாக ஆதரித்து வந்திருப்பது போலவே, தமிழ் டாக்கிகளின் நீளம் குறைய வேண்டும் என்ற கட்சியையும் வற்புறுத்தி வந்திருக்கிறேன். அதைத்தான் இப்போதும் சொல்கிறேன். ஸ்ரீ எஸ். எஸ். வாஸன் சொல்வதற்காகப் புதிதாக ஒன்றைச் சொல்லவில்லை.

ஸ்ரீ எஸ். எஸ். வாஸன் மாறாகச் சொல்லிவிட்டாரே என்பதற்காக நான் என்னுடைய கட்சியைச் சொல்லாமல் பேசாமல் இருக்க வேண்டுமென்று சு. மி. ஆசிரியர் கருதுகிறாரா? அதுதான் பத்திரிகை தர்மம் என்பது அவர் அபிப்பிராயமா?

இன்னும் "பேசும் படம்" "சண்டமாருதம்" "தந்தி" "Indian Journalist", "Flash" "Picturpost" "Talkatone" பத்திரிகைகளில் 11000 அடிக் கட்சியை ஆதரித்து எழுதியிருக்கிறதே? "Free Indir" வில் ஒரு பட முதலாளியும், டைரக்டரும் தீவிரமாய் அக்கட்சியை ஆதரித்திருக்கிறார்களே! அவர்கள் எல்லாம் ஸ்ரீ வாஸன் மேல் விரோதத்தின் பேரில் எழுதியவர்களா? — இல்லையென்றால், நான் எழுதியது மட்டும் ஏன் விரோதத்தினால் எழுதியதாக வேண்டும்?

"தேக்கச்சேரி செய்தால் நாங்கள் எதுவும் செய்வோமாம்!" என்று சு. மி. ஆசிரியர் சொல்வது எனக்குப் பரம ஆச்சரியத்தை விளைவிக்கிறது. ஒருவரும் கனவிலும் கருத முடியாத தோஷாரோபணத்தை அவரே ஏன் செய்துகொள்ள வேண்டும்?

ஸ்ரீ வி. ஆர். சீனிவாசன் மனது வைத்தால் இந்தத் தமிழ்நாட்டில் உள்ள சகல ஜனங்களுக்கும் டீ பார்ட்டி வைக்கலாம் என்பது யாருக்குத் தெரியாது? அவரும் "ஹிந்து" ஆசிரியர் ஸ்ரீ கே. சீனிவாசன் முதலியவர்களும் ஒரு டீ பார்ட்டிக்காக எதுவும் செய்யக் கூடியவர்கள் என்பதாக யாராவது சொல்வார்களா?

அப்படி ஸ்ரீ கே. சீனிவாசனும், ஸ்ரீ வி. ஆர். சீனிவாசனும் ஒரு டீ பார்ட்டிக்கு மயங்கக்கூடியவர்கள் என்று நான் கருதியிருக்கும் பட்சத்தில், நானும் அவர்களைத் தமிழிசை இயக்கத்தில் சேர்ப்பதற்காக ஒரு டீ பார்ட்டி வைத்திருக்க மாட்டேனா?

"டீ பார்ட்டிக்குப் பிறகு," என்று தமிழ்மகன் எழுதியதற்கு "டீ பார்ட்டியில் ஸ்ரீ எஸ். எஸ். வாஸனுடைய கட்சியைக் கேட்டுவிட்டு" என்றுதான் சாதாரணமாய் அர்த்தம் செய்துகொள்ள வேண்டியது. வேண்டுமென்று யாரோ அனர்த்தம் செய்து சொன்னதை ஸ்ரீ வி. ஆர். சீனிவாசன் நம்பி விட்டது எனக்கு மிக்க வியப்பை உண்டாக்குகிறது.

பத்திரிகைக்காரர்களாகிய நாம் பொது விஷயங்களில் நம்முடைய அபிப்பிராயத்தைச் சொல்வது நமது தலைமேல் சுமந்திருக்கும் கடமை என்பதாக நம்பிக் காரியம் செய்து கொண்டிருக்கிறோம்.

வேண்டியவர்கள் — வேண்டாதவர்கள் என்று பார்த்தால், அந்தக் கடமையை நாம் நிறைவேற்ற முடியாது.

“ராஜாஜியிடம் நமக்கு ரொம்ப பக்தி உண்டு; இது எல்லாருக்கும் தெரியும். ஆகையால் அவர் சொல்வதை நாம் ஆதரித்தால் யாராவது தப்பர்த்தம் செய்து கொள்வார்கள்” என்பதற்காக, ராஜாஜி கட்சி நியாயமென்று தோன்றியபோதிலும் அதை நான் ஆதரிக்காமல் சும்மா இருக்க முடியுமா?

அதே மாதிரி, “ஸ்ரீ எஸ். எஸ். வாஸன் ஒன்றைச் சொல்கிறார்; அது பிசகு என்று தோன்றினாலும் நாம் வெளியில் சொல்லக் கூடாது. ஏனெனில், விரோதத்தினால் சொல்வதாக யாராவது எண்ணிக் கொள்வார்கள்” என்று நான் ஒரு முக்கியமான விஷயத்தில் சும்மா இருப்பதும் முடியாத காரியம்.

‘வேண்டியவர்கள்’ என்பதற்காக ஒரு பாதியையும், ‘வேண்டாதவர்கள்’ என்பதற்காக இன்னொரு பாதியையும் தள்ளிவிட்டால், அப்புறம் எந்தப் பொது விஷயத்தைப் பற்றித் தான் நாம் விவாதிக்க முடியும்? பத்திரிகைக் கடையையே கட்ட வேண்டியதுதான். இந்த யோசனையைச் சு. மி. ஆசிரியர் எனக்குக் கூற மாட்டார் என்று நினைக்கிறேன்.

ஒருவேளை, “தமிழ் மகன்” கட்டுரையில் அபிப்பிராயங்களை அழுத்தமாகச் சொல்லியிருப்பது ஸ்ரீ வி. ஆர். சீனிவாசனுக்குப் பிடியாமலிருக்கலாம். ஆனால் ஒரு விஷயத்தைப் பற்றி அழுத்தமாக எழுதுவதற்கும், துவேஷத்தினால் எழுதுவதற்கும் உள்ள வித்தியாசம் ஸ்ரீ வி. ஆர். சீனிவாசனுக்குத் தெரியாமலிருக்க நியாயமில்லை. துவேஷத்தினால் எழுதுவதற்கு உதாரணம் வேண்டுமானால் ஸ்ரீ வி. ஆர். சீனிவாசன் அவருடைய சகோதர தினசரியில் ‘ரஸமட்டம்’ எழுதி யிருப்பதைப் பார்க்கட்டும். பங்காளிக் காய்ச்சல் என்று அவர் சொல்வதை அந்தக் கட்டுரையில் காணலாம். பங்காளிக் காய்ச்சலினாலோ, எழுத்தாளிக் காய்ச்சலினாலோ, அல்லது சிறு கதைப் போட்டியில் பரிசு வராத காரணத்தினாலோ, எப்படி ‘ரஸ மட்டம்’ துவேஷத் தீயைக் கக்கியிருக்கிறார் என்பதைப் பார்க்கலாம். பொது விஷயங்களைப் பற்றி அழுத்தமாக எழுதுவதற்கும், விஷயத்துக்குக் கொஞ்சமும் சம்பந்தமில்லாமல் துவேஷத்தினால் தாக்குவதற்கும் உள்ள வித்தியாசத்தையும் நன்கு அறியலாம்.

எனவே, ஸ்ரீ வி. ஆர். சீனிவாசன் துக்கப் படுவதாயிருந்தால், ‘ரஸ மட்டம்’ போன்றவர்களுக்காக வேண்டிய வரையில் துக்கப் படட்டும். எனக்காக அவர் துக்கப்படும்படியாக ஒன்றும் நேரவில்லை, இனியும் நேராது என்பதைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

* * *

இந்த விவாதத்தை முடிப்பதற்கு முன்னால் இன்னும் ஒரு விஷயம் குறிப்பிட வேண்டியிருக்கிறது. “ஹிந்துஸ்தான்” ஆசிரியரும் எனது நண்பருமான ஸ்ரீ ரா. நா. இந்த விவாதத்தில் தலையிட்டே தீருவேன் என்று முன் வந்திருக்கிறார். ஸ்ரீ எஸ். எஸ். வாஸனுடைய பேச்சைத் “தமிழ் மகன்” நேரில் கேளாததினால்தான் இந்த விவாதம் இப்படித் திசை தப்பிப் போய்விட்டது என்று வருத்தப் படுகிறார். ஸ்ரீ வாஸன் பேச்சைத் “தமிழ் மகன்” நேரில் கேளாதது உண்மைதான்; அதனால் “தமிழ் மகன்” அதிக நஷ்டமடைந்து விட்டதாகத் தோன்றவில்லை. ஆனால், நேரில் கேட்ட ஸ்ரீ ரா. நா. ரொம்ப நஷ்டமடைந்திருக்கிறார்; படிக்கும் சக்தியையே இழந்து விட்டிருக்கிறார்! ஸ்ரீ ரா. நா. எழுதியிருப்பது இது:—

“மங்கம்மா சபதம் இன்னும் வெளிவரவில்லை. அதற்குள் அதைக் குப்பைப் படம் என்று ‘தமிழ் மகன்’ முடிவு கட்டி விட்டார் ......”

நண்பர் ரா. நா.வை இன்னொரு தடவை “தமிழ் மகன்” கட்டுரையைக் கவனமாய்ப் படிக்கும்படி கேட்டுக் கொள்கிறேன். மங்கம்மா சபதம் படத்தைக் குப்பைப் படம் என்று சொல்லியிருக்கிறதா, மங்கம்மா சபதம் கதையைக் குப்பைக் கதை என்று சொல்லியிருக்கிறதா என்று தயவு செய்து கவனிக்கட்டும்.

“தமிழ் மகன்” கட்டுரையில் படத்தைப் பற்றிப் பிரஸ்தாபிக்கவேயில்லை; கதையைத்தான் குப்பைக் கதை என்று சொல்லியிருக்கிறது.

அச்சு எழுத்தில் இருப்பதையே நண்பர் ரா. நா. இவ்வளவு அழகாய்ப் படித்திருக்கிறாரே, ஸ்ரீ வாஸனுடைய பேச்சை எப்படிக் கேட்டிருப்பாரோ, தெரியவில்லை. ஆனால், முன்னெல்லாம், நண்பர் ரா. நா. இப்படியில்லை. எனவே, ஸ்ரீ வாஸனுடைய டீ பார்ட்டியில் அவருடைய பேச்சைக் கேட்டு, பினாக் போர்டில் எழுதியதையும் பார்த்ததின் பலனாகத்தான் இந்த விபரீதம் ஏற்பட்டிருக்க வேண்டும். நண்பர் ரா. நா. வுக்கு மீண்டும் படிக்கும் சக்தியை அருளுமாறு ஆண்டவனைப் பிரார்த்திக்கிறேன்.

★ பல நாள் திருடன் இராமலிங்கம் — ஒரு நாள் அகப்பட்டுக் கொண்டான்!

# சமையல் எப்படி?

[ ராஜி ]

● "இன்றைய தினம் சமையல் எப்படி?" என்று ஒவ்வொரு தினமும் இராமலிங்கத்தின் தாயார் கேட்பாள். "சமையல் வாயில் வைக்க முடியவில்லை" "மகா மோசம்" என்று பதில் சொல்லுவான் இராமலிங்கம். அது மாதிரியான பதிலில்தான் இராமலிங்கத்தின் தாயார் மிகவும் சந்தோஷப்படுவாள். எதற்காக அவன் இப்படிச் சொல்கிறான், அதைக் கேட்டு விட்டு அவன் தாயார் ஏன் சந்தோஷப்படுகிறாள் என்று தெரிந்துகொள்ள வேண்டுமானால் பின் வரும் விவரங்களைத் தெரிந்து கொள்வது அவசியம்.

இராமலிங்கத்திற்கு வயது இருபது ஆனவுடனேயே அவன் தகப்பனார் இறந்து விட்டார். அவன் தாயார் மிகவும் சிரமப்பட்டு இராமலிங்கத்தை பி. ஏ. வரையிலும் படிக்க வைத்தாள். அதிர்ஷ்டவசமாக இராமலிங்கத்திற்கு நல்ல வேலையும் கிடைத்தது. நல்ல இடத்தில் கலியாணமும் ஆயிற்று.

இராமலிங்கத்தின் தாயார் மிகவும் நல்ல குணமுள்ளவளாக இருந்தாலும் பழைய காலத்து மனுஷியானதால் நாட்டுப் பெண் விஷயத்தில் அவ்வளவு தாராளமான நோக்கத்துடன் இருக்கவில்லை. இது இராமலிங்கத்திற்கு நன்றாகத் தெரியும். "பங்கஜம்! அம்மா சொல்படி நட!" என்று தன் மனைவியை அடிக்கடி எச்சரித்துக் கொண்டிருந்தான் இராமலிங்கம்.

இராமலிங்கம் ஆபீஸிலிருந்து வந்ததும் "குழந்தை! பங்கஜம் மிகவும் நன்றாகப் பாடுகிறாள். இரண்டு பாட்டு பாடச் சொல்லிக் கேளேன்" என்று அவன் தாயார் சொல்லுவாள். பங்கஜம் நன்றாகப் பாடுவாள் என்பது இராமலிங்கத்திற்குத் தெரிந்தாலும், "போதும் போதும், அவள் பாட்டு! காதால் கேட்க முடியவில்லை. நீயே கேட்டுக் கொண்டிரு" என்று பதில் சொல்லுவான். தப்பித் தவறி இராமலிங்கம் "பங்கஜம் நன்றாகத்தான் பாடுகிறாள்" என்று சொல்லியிருந்தால் "உன் பெண்டாட்டி எதைச் செய்தாலும் உனக்கு நன்றாகத்தானிருக்கும்" என்று அம்மா கோபித்துக் கொண்டு விடுவாள் என்பது அவனுக்கா தெரியாது?

"பங்கஜத்தை சினிமாவிற்கு அழைத்துக் கொண்டு போயேன்" என்று இராமலிங்கத்தின் தாயார் சொல்லுவாள். "நன்றாக இருக்கிறது. அந்தக் கெட்ட வழக்கம் நம்ம வீட்டுக்கு வேண்டாம். நீ உன் காலத்தில் எந்த சினிமாவுக்குப் போனாய்?" என்று இராமலிங்கம் சொல்லுவான்.

● ஒரு நாள் காலையில் வழக்கம் போல ஆபீஸுக்குப் போவதற்குமுன்பு இராமலிங்கம் சாப்பிட உட்கார்ந்தான். பங்கஜம் பரிமாறினாள். தாயார் ஒரு நாளும் இல்லாதபடி இராமலிங்கத்தின் பக்கத்திலேயே உட்கார்ந்திருந்தாள். கறி, கூட்டு, அப்பளாம், பொரியல், பச்சடி, பாயசம் இலையில் பரிமாறப்பட்டதும் கொஞ்சம் எடுத்து இராமலிங்கம் ருசி பார்த்தான். நன்றாக இல்லை என்பதற்கு அறிகுறியாக முகத்தைச் சுளுக்கிக் கொண்டான். அன்றைய தினம் சமையல் நன்றாகத் தானிருக்கிறது என்பது இராமலிங்கத்திற்குத் தெரியும். இருந்தாலும் சந்தோஷத்தை எப்படி வெளியில் காட்டிக் கொள்கிறது?

"ஏண்டா, சமையல் எப்படி இருக்கிறது?" என்று ஆவலுடன் விசாரித்தாள் தாயார். "சமையலா, மகா மோசம்! எல்லா நாளையும்விட இன்றையச் சமையல் ரொம்பக் கேவலம். ரசத்தில் ஏக உப்பு. குழம்பை வாயில் வைக்க யோக்கியதை இல்லை. இனிமேல் பங்கஜத்தைச் சமைக்கச் சொல்லாதே" என்று கோபத்துடன் சொன்னான் இராமலிங்கம். அதைக் கேட்டதும்



அவன் தாயாருக்குத் தூக்கி வாரிப் போட்டது. "இன்று பங்கஜம் சமைக்கவில்லை. வருஷப் பிறப்பு ஆனதால் நான் தாண்டா சமைத்தேன்" என்று மெல்லிய குரலில் அவள் சொன்னபோது, அழுகை பொங்கிக்கொண்டு வரும்போல் இருந்தது. இராமலிங்கம் குனிந்த தலையுடன் உட்கார்ந்திருந்தான்.

# பூந்தோட்டம்

ஆசிரியர்
ரவீந்திரநாத் டாகுர்
மொழிபெயர்ப்பு
த. நா. குமாரஸ்வாமி

## பதினைன்காம் அத்தியாயம்
## சுடர் விட்டு எரிந்தது!

● ஆதித்தியன் ஒரு கிண்ணத்தில் மருந்தை எடுத்துக் கொண்டு அறையினுள் பிரவேசித்தான்.

"இதென்ன மறுபடியும்?" என்றாள் நீரஜா.

"டாக்டர் சொல்லிவிட்டுப் போனார்; மணி தவறாமல் மருந்து கொடுக்க வேண்டுமென்று."

"இந்த மருந்தைக் கொடுப்பதற்கு வேலை ஒன்றாகக் கட்டிக்கொண்டு வருகிறதுதானே! உங்களாலெல்லாம் முடியாது போனால் பகல் வேளையிலும் எனக்காக ஒரு நர்ஸை அமர்த்துங்களேன், என்மேல் உங்களுக்கு வியர்த்து விடியும் பக்ஷத்தில்."

"உனக்குச் சுச்ருஷை புரியும் சாக்கில் உன்னருகில் வரும் நல்ல சந்தர்ப்பத்தை நான் ஏன் விட வேண்டும்?"

"என்னருகில் இருப்பதை விடத் தோட்ட வேலையைக் கவனித்தாலாவது பயனுண்டு; எனக்குத் திருப்தியாக இருக்குமே. நான்தான் படுத்த படுக்கையாகக் கிடக்கிறேனே! எப்படிக் கவனிக்க முடியும்? தோட்டம் நாளுக்கு நாள் நாசமாய்ப் போய்க் கொண்டிருக்கிறது."

"நாசமாகத்தான் போகட்டுமே—சொஸ்தமாகி நீ எழுந்திரு முதலில். அப்புறம் பழையபடியே நாமிருவரும் சேர்ந்து உழைத்து அதை சுவர்க்கமாக்குவோம்."

"ஸரளாவும் போய் விட்டாள். நீங்களோ தனி ஆள். வேலையில் மனம் லயித்தால் தான் லயித்தது. ஆனால் இவ்வளவு தூரம் ஆக்கி விட்டுக் கண்ணெதிரேயே அழித்து நஷ்டமடையலாமா?"

"நஷ்டத்தைப் பற்றிக் கவலைப்பட வில்லை, நீரு. தோட்டம் வைப்பது என் தொழில் என்பதை இத்தனை நாள் வரைக்கும் நீயே மறந்திருந்தாய். இந்த வேலையில் உத்சாகம் எனக்கு முதலில் இருந்து வந்தது. இப்போது என் மனம் அதன்மேல் செல்ல வில்லையே?"

"இப்படியெல்லாம் எடாகூடம் பண்ணினால் என்ன செய்வது? உங்களுக்கு சாமர்த்தியமில்லையென்று நான் சொன்னேனா? ஏன், நேற்று வரைக்கும் அங்கேதான் உழைத்துக் கொண்டிருந்தீர்கள். கொஞ்ச நாளைக்கு அந்த வேலை நின்று போய் விடுவதனால் இவ்வளவு வேதனைப் படுவானேன்?"

"விசிறட்டுமா?"

"இதையெல்லாம் உங்களை யார் செய்யச் சொன்னார்கள்? இந்தக் காரியமெல்லாம் உங்களுக்குத் தகாது. இதனால் எனக்கு வேதனைதான் அதிகமாகும். உங்களுக்குப் பொழுது போகாமற் போனால் 'ஹார்டிகல்சரிஸ்ட் க்ளப்'தான் இருக்கிறதே; அங்கே போங்களேன்!"

"சிவப்பு லிலி உனக்கு ரொம்பப் பிடிக்கும்; எங்கே தேடியும் ஒரு பூ கூட அகப்பட வில்லை. இந்தத் தடவை நல்ல மழை பெய்யாததால் செடிகள் எல்லாம் சரியாக இல்லை."

"இந்த வீண் பேச்செல்லாம் எதற்கு? இதைவிட ஹலாவை இங்கே கூப்பிடுங்கள். நான் படுக்கையில் இருந்தபடியே தோட்ட வேலையைக் கவனித்துக் கொள்ளுகிறேன்; பாருங்களேன். நான் நோயில் படுத்துக் கொண்டதால், என் பூந்தோட்டமும் படுத்து விடுமென்று சொல்லுகிறீர்களா? என் பேச்சைக் கேளுங்கள். காய்ந்துபோகும் வீஸன் புஷ்பச் செடிகளையெல்லாம் பிடுங்கி எறிந்துவிட்டு, அந்த இடத்தை நன்றாகக்

கொத்தி வைக்கச் சொல்லுங்கள். படிக் கட்டின் கீழிருக்கும் குச்சில் கருப் பிண்ணாக்கு கட்டி கட்டியாக இருக்கிறதே! ஹலாவிடம் சாவி இருக்கிறது."

"இதைப் பற்றி ஹலா எனக்கு ஒன்றுமே சொல்லவில்லையே?"

"அவனுக்குச் சொல்லவேண்டுமென்ற அக்கறை என்ன? நீங்கள் இரண்டு பேருந் தான் அவனைத் துச்சமாக எண்ணிவிட்டீர்களே! வேலை தெரியாத துரை, அனுபவம் முதிர்ந்த குமாஸ்தாவை அலக்ஷ்யம் செய்வது போல நீங்களும் அவனை —"

"ஹலாவைப் பற்றி உண்மையாகச் சொல்லப் போனால், விஷயம் விரஸமாகப் போகும்."

"சரி சரி, நான் இந்தப் படுக்கையில் இருந்தபடியே அவனிடம் வேலை வாங்கிக் கொள்வேன். பாருங்கள். இரண்டே நாளில் தோட்டம் எப்படிக் கன கனவென்று ஆகிவிடுகிறது! தோட்டத்தின் 'மாப்'பை என்னிடம் கொடுங்கள், என் தோட்டக் குறிப்போடு. படத்தில் பென்சிலைக் கொண்டு இடத்தைக் குறித்துச் செய்யவேண்டியதை யெல்லாம் செய்கிறேனா இல்லையா பாருங்களேன்!"

"எனக்கு அதில் கைவைக்கப் பாத்தியதை ஏதுவுமே இல்லையா?"



"உங்களுக்கு இல்லை. நான் போவதன் முன் இந்தத் தோட்டத்தை என்னிஷ்டப்படி உருவாக்கிவிட்டுச் செல்வேன். இதோ சொல்லிவிட்டேன்; ரோட்டு ஓரமாக இருக்கும் 'பாட்டில் பாம்' ஒன்றுகூட வைக்காமல் எடுத்துவிடப் போகிறேன். அதற்குப் பதிலாக அந்த இடத்தில் ஜாவு மரங்களைப் பயிராக்கப் போகிறேன் — அப்படித் தலை ஆட்டுவானேன் நீங்கள்? வளர்ந்த பிற்பாடு பாருங்களேன். உங்களுடைய அந்த 'லான்' (புல்-தரை) இருக்கிறதே — அதை வைத்துக் கொள்ளப் போவதில்லை. அந்த இடத்தில் சலவைக் கல்லால் ஒரு மேடை கட்டப் போகிறேன்."

"அந்த இடத்தில் மேடை அர்த்தமாயிருக்காதே? குலிஸ்தானைப்போல் அதை ஆக்க வேண்டுமென்று என்ன அசட்டு ஆசையோ உனக்கு?"

"சும்மா இருங்கள். நன்றாகத்தானிருக்கும் அந்த இடத்தில். கட்டின பிறகு பார்த்தால் நீங்களே அதிசயப் படுவீர்கள். கொஞ்ச நாளைக்காவது இந்தத் தோட்டம் என்னுடையதாகவே இருக்கட்டுமே. அதற்கு மேல் என் உயிரான இந்தத் தோட்டத்தை உங்களிடமே கொடுத்து விடுகிறேனே. எனக்குச் சக்தி இல்லை யென்று எண்ணமாக்கும் உங்களுக்கு! என்னால் முடியுமென்பதைக் காட்டுகிறேனா இல்லையா பாருங்களேன்? என் கையின் கீழ் மூன்று ஆட்களை வைத்து விடுங்கள். தேவையாயிருக்கும்போது கூலியாட்கள் எழெட்டுப் பேரை அமர்த்தி விடுங்கள். ஞாபகமிருக்கிறதா — எனக்குத் தோட்டப் பயிற்சியில் திறமையே போதாதென்று நீங்கள் ஒருநாள் சுட்டிக் காட்டினீர்களே; இருக்கிறது இல்லை யென்பது சீக்கிரத்தில் தெரிந்து போய் விடுகிறது. இது மட்டும் கவனமிருக்கட்டும்: இந்தத் தோட்டம் எனக்கே சொந்தம்; என்னுடையதே. எனக்குத்தான் இதில் பூர்ண உரிமை உண்டு."

"சரி, அப்படியே ஆகட்டும். அப்புறம் என் கதி?"

"நீங்கள் கடையைப் பார்த்துக் கொள்ளுங்கள்; அங்கேதான் உங்களுக்குப் பொழுது போகும் வரை ஆபீஸ் வேலை மாதிரி எவ்வளவோ அலுவல் இருக்கிறதே."

"உன்னோடு நான் இருக்கக் கூடாதென்று சொல்லுகிறாயா?"

"ஆமாம், எந்நேரமும் பக்கத்தில் வைத்துக் கொள்வதற்கு முன்போல் நான் இல்லையே!"

"சரிதான். என்னை சகித்துக் கொள்ள உனக்கு வலிமை வரும்போது நான் உன்

னிடம் வருவேன். அப்போது கூப்பிடு என்னை. குடலையில் உனக்காக கத்தாழை மலர்கள் கொண்டு வந்திருக்கிறேன். உன் படுக்கையின் மேல் வைத்து விட்டுப் போகிறேன். வேறு விதமாக எண்ணிக் கொள்ளாதே."

இதைச் சொல்லி விட்டு ஆதித்தியன் எழுந்தான்.

நீரஜா, அவனுடைய கைகளைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டு, "போக வேண்டாம். சற்று உட்காருங்கள்" என்றாள். பூச் செருகியில் உள்ள ஒரு மலரைச் சுட்டி, "அந்தப் பூவின் பெயர் என்ன?" என்று கேட்டாள்.




எந்த விதமான பதில் சொன்னால் அவளுக்குத் திருப்தியாக இருக்கு மென்பதை ஆதித்தியன் அறிவான். "எனக்குத் தெரியாதே" என்றான்.

"எனக்குத் தெரியும். சொல்லட்டுமா? 'பெட்டூனியா' எனக்குத் தெரியாது; நான் மண்டு என்றுதானே நினைத்தீர்கள்?"

ஆதித்தியன் சிரித்துவிட்டு, "சே! என் ஸஹதர்மிணி! நீ மட்டியாக இருக்கும் பக்ஷத்தில் நானும் மட்டிதான். இந்த மட்டித் தனத்தை நம் வாழ்வில் சரிபாதியாகப் பங்கிட்டுக் கொண்டிருக்கிறோம்."

"வாழ்க்கையில் எனக்குள்ள பங்கு முடிவுக்கு வந்துவிட்டதே. அதோ வாயிலண்டை உட்கார்ந்து கொண்டு புகையிலை மென்றும் அந்தத் தர்வான்கூட இருப்பான்; சில தினங்களுக்கெல்லாம் நான்தான் இல்லாமல் போய் விடுவேன். அதோ, நிலக்கரியை இறக்கிவிட்டுக் காலியாகத் திரும்பும் அந்த மாட்டு வண்டிகூட அன்றாடம் போய்க் கொண்டும் வந்து கொண்டுமிருக்கும்; ஆனால் என்னுடைய இந்தச் சடலம் அதிக நாள் வினைய வாராதே" என்றதும் நீரஜா சட்டென ஆதித்தியனின் கையை அழுத்திப் பிடித்துக் கொண்டாள்.

"நான் இருப்பேனா போய்விடுவேனா, சொல்லுங்கள் — எவ்வளவோ புஸ்தகங்கள் படித்திருக்கிறீர்களே, என்னிடம் உண்மையைக் கூறக் கூடாதா?" என்றாள்.

"புஸ்தகம் எழுதியவன் எவ்வளவு இந்த வித்தையில் கரை கண்டிருக்கிறானோ அவ்வளவே நானும் கண்டிருக்கிறேன். யமன் கோயிலின் வாசற்படி வரைக்கும் வந்து நின்று விட்டேன். அதற்கு மேல் செல்லத் தைரியமில்லை."

"உங்களுக்கு என்ன படுகிறது, நான் இருப்பேனா சொல்லுங்களேன்! இது கூடவா முடியாது உங்களால்?"

"இப்போது நானிருப்பது நிச்சயமானால், நீயுந்தான் இருப்பாய்."

"நிச்சயமில்லாமல் என்ன! இந்தத் தோட்டம் இருப்பதும் நிச்சயமே. ஆனால் நான் இருப்பது மட்டும் ஏன் நிச்சயமில்லை? அப்படி இராவே இராது. ஒருபோதும் இருக்காது! இதைப் போலவேதான் அந்த நாளிலும் ஒளி குறையக் குறையக் காக்கைகள் தம் கூட்டினுள்ளே வந்து அடையும்; இவ்வாறே கமுக மரத்தின் ஓலை சல சலவென்று அசைந்து ஆடும் என் கண்முன்னே; அந்த நாளில் நான் இருப்பதாகவே — தோட்டமெங்கும் நான் நிறைந்திருப்பதாகவே — பாவித்துக் கொள்ள வேண்டும். காற்று உங்கள் தலைமயிரை அலைப்பும்போது என் மெல்லிய விரலே அதைச் செய்வதாக எண்ணிக் கொள்ள வேண்டும். சொல்லுங்கள்; இந்த மாதிரியெல்லாம் என்னைப் பற்றி நினைப்பீர்களா?"

ஆதித்தியன் பதில் சொல்லாமல் எப்படி இருப்பது? "கட்டாயம் நினைப்பேன்",

என்றான். ஆனால் இதை அவன் சொன்ன தோரணை, அவளுக்கு நம்பிக்கையை மூட்டுவதாக இல்லை.

நீரஜா பரபரப்புற்றவளாய், “நீங்கள் படிக்கும் புஸ்தகங்களை எழுதியவர்கள் பெரிய மேதாவிகள்தான். அவர்களுக்கு என்ன தெரியும்? எனக்குத் தெரியும்:— என் வார்த்தையை நம்புங்கள். நான் இருக்கத்தான் போகிறேன். இந்த வீட்டிலேயே இருக்கத்தான் போகிறேன். உங்கள் அருகிலேயே, இதோ நன்றாகத் தெரிகிறதே என் கண்ணுக்கு. இதோ உங்களிடம் சொல்லிவிட்டுப் போகிறேன்; உங்களுடைய தோட்டத்தை நானே பார்த்துக் கொள்வேன். முன்னே எப்படிக் கவனித்தேனோ அதைவிட நன்றாகவே கவனித்துக் கொள்வேன். எனக்குத் துணை யாருமே வேண்டாம், யாருமே வேண்டாம்!” என்றான்.

படுக்கையில் கிடந்த நீரஜா, எழுந்து திண்டின் மேல் சாய்ந்து உட்கார்ந்த வண்ணம், “என் மேல் கருணை இல்லையா, கருணை இல்லையா? இவ்வளவு ஆசை உங்கள் மேல் நான் வைக்கும்போது உங்களுக்குக் கருணை இல்லையா? இத்தனை நாள் உங்கள் அகத்தில் எனக்கு இடம் தந்து ஆதரித்தது போலவே இப்பொழுதும் என்னை ஏற்றுக் கொள்ளுவீர்கள். பருவ காலங்களில் முறுவல் காட்டும் மலர்களைக் கண்டு களிப்பதுபோல், உள்ளத்திலாவது என்னை ஸ்பரிசிக்க மாட்டீர்களா? அப்படி இரக்கமற்ற மனது உங்களுக்கு இருக்கும் பக்ஷத்தில் இந்த இடத்தில் எனக்கும் இடம் ஏது? என் தோட்டத்தை நீங்கள் கவர்ந்து செல்வதாயிருந்தால் நான் இந்தக் காற்றோடு காற்றாக எந்தச் சூன்யத்தில் அலைவேனோ?” என்றான்.



நீரஜாவின் கண்களிலிருந்து அருவியென நீர் பெருகியது.

● ஆதித்தியன் எழுந்து படுக்கையின் மேல் உட்கார்ந்தான். நீரஜாவின் முகத்தையும், மார்பையும் தன் பக்கமாக அணைத்துக்கொண்டு கையால் அவளுடைய தலையை மெல்லத் தடவி, “நீரு, உடம்பைப் பாழாக்கிக் கொள்ளாதே” என்றான்.

“இந்தச் சரீரம் போனால்தான் என்ன? எனக்கு எதுவுமே வேண்டாம். நீங்கள் ஒருவர் எனக்கு இருந்தால் போதும். எதை வேண்டுமானாலும் எடுத்துக் கொள்ளுங்கள். நான் ஒன்று சொல்லுகிறேன். என் மேல் கோபித்துக் கொள்ளக் கூடாது” என்று சொன்ன போது அவளுடைய தொண்டை அடைத்து வந்தது. வேதனை மட்டுப்பட்டதும் அவள், “ஸரளாவை நான் கொடுமையாக நடத்தி விட்டேன். உங்களுடைய பாதத்தைத் தொட்டுச் சொல்லுகிறேன். இனிமேல் இந்த மாதிரியான அக்கிரமத்தைச் செய்ய மாட்டேன். என்னை மன்னித்து விடுங்கள். என் மேல் மட்டும் ஆசை இருக்கட்டும். என் மேல் பக்ஷமாயிருங்கள். எதைக் கேட்டாலும் நான் தருவேன்.”

“உனக்கு உடம்பிலிருப்பதுபோல், மனத்திலும் வியாதி இருக்கிறது. நீரு, அனாவசியமாக ஏன் இப்படியெல்லாம் உருகிப் போகிறாய்?” என்றான் ஆதித்தியன்.

“கேளுங்கள், சொல்லுகிறேன். நேற்று ராத்திரியே பிடித்து இதே எண்ணம் எனக்கு. ஸரளாவைப் பார்க்க நேர்ந்தால் நிர்மலமான மனசுடன் என் சொந்தத் தங்கையாகவே அவளைப் பாவித்து மார்போடு தழுவிக் கொள்ள ஆசைப்படுகிறேன். என்னுடைய இந்தக் கடைசிப் பிரதிக்ஞையை நீங்கள் நிறைவேற்றி வைக்க வேண்டும். உறுதியாகச் சொல்லுங்கள். நீங்கள் தரும் அன்பிலிருந்து என்னை வஞ்சிக்க மாட்டீர்களே? அப்போதுதான் எல்லார் பேரிலும் எனக்கு நேசம் ஏற்படும்.”

இதற்குப் பதில் எதுவும் நாமலே ஆதித்தியன் அடிக்கடி நீரஜாவின் முகத்திலும் நெற்றியிலும் முத்தமிட்டான். அவளுடைய கண்ணிமைகள் தாமாகவே கூம்பின. சற்று நேரம் அந்த இன்பத்தைப் பருகியதும் அவள், “ஸரளா சிறைமீளும் அந்த நாள் எப்போதென்றுதான் கணக்கிட்டுக் கொண்டிருக்கிறேன். அதற்கு முன் நான் இறந்து விடுவேனோ என்றுதான் திகில்படுகிறேன். அவளிடம் மனங்குளிர இரண்டொரு வார்த்தை பேசாமல் போய் விட்டால் என்ன பண்ணுவது? இனிமேல் விளக்கைப் பிரகாசமாகத் தூண்டுச்சர் கவி அருய பாரவின் ‘ஏஷைதா’வைச் சற் படியுங்கள்” என்றதும் தலையணையின் ம விருந்து அந்தப் புஸ்தகத்தை எ

எடுத்து அவனிடம் தந்தான். ஆதித்தியன் அதை அவளுக்குப் படித்துச் சொன்னான்.

அதைக் கேட்கும் ஆனந்தத்தில் தூக்கம் மெல்ல அவளுடைய கண்களை அழுத்தியது. அப்போது ஆயா அங்கே வந்து, "கடிதம் வந்திருக்கிறது" என்று சொன்னபோது நீரஜாவின் உறக்கம் கலைந்து போயிற்று. பட படவென்று அவளுடைய மார்பு அடித்துக் கொண்டது. ஆதித்தியனுக்கு அவனுடைய நண்பன் ஒருவன் அனுப்பிய செய்தி அது. ஜெயிலில் இடம் இராததால் சில கைதிகளை அவர்களுடைய கெடு முடிவதற்குள் விடுதலை செய்வார்களென்றும், அவர்களுள் ஸரளா ஒருத்தியென்றும் எழுதியிருந்தான். இந்த சமாசாரம் ஆதித்தியனுக்கு அளவிலா மகிழ்ச்சியைத் தந்தது. அவனது உள்ளம் ஸரளாவுக்காகத் துள்ளியது. மிகச் சிரமத்துடன் இந்தக் கிளர்ச்சியை அடக்கிக் கொண்டான்.

"யார் எழுதிய கடிதம்? சமாசாரம் என்ன?" என்று வினவினாள் நீரஜா.

கடிதத்தைப் படிக்கும்போது தன் குரலில் நடுக்கம் தோன்றுமோவென அஞ்சி அதை நீரஜாவினிடமே கொடுத்துவிட்டான். ஆதித்தியன் முகத்தையே அவள் கவனித்தாள். அவன் வாயிலிருந்து ஒரு வார்த்தையும் எழவில்லை. வார்த்தை சொல்வதற்கு அவசியமே இராமல் போயிற்று. நீரஜாவுக்கும் வார்த்தை எழவில்லை, சற்று நேரம் வரை. பின்னர் அவள் மிகவும் உணர்ச்சியுடன் பேசினாள்: "இனித் தாமதமாகாது ...... இன்றே வந்து விடுவாள் ...... அவளை என்னிடம் அழைத்துக் கொண்டு வருகிறீர்களா? ......"

"என்ன என்ன! நீரு, உனக்கென்ன! நர்ஸ்! சீக்கிரம் டாக்டரைக் கூப்பிடு."

"டாக்டர் வெளிப் பக்கத்து அறையில் இருக்கிறார். அழைத்துக் கொண்டு வருகிறேன்."

"அவர் எங்கே? வந்தாரா? — இதோ வந்துவிட்டார்! சற்று முன் சாதாரணமாகப் பேசிக் கொண்டிருந்தாள். திடீரென இப்படி மூச்சுப் பேச்சில்லாமல் போய்விட்டதே! பிரக்ஞையே இல்லை."

டாக்டர் நாடியைப் பிடித்துப் பார்த்ததும் மௌனம் சாதித்தார்.

சற்று நாழிகைக்கெல்லாம் நோயாளி கண்களை மிரள மிரள விழித்து, "டாக்டர், நான் பிழைத்து எழுந்திருப்பேனா? ஸரளாவைப் பாராமல் என் உயிர் போகாது. அவளை நான் மனமார ஆசீர்வாதம் செய்ய வேண்டுமே! என் கடைசி ஆசீர்வாதம்" என்றாள்.

மறுபடியும் அவளுடைய கண்கள் மூடிக் கொண்டன. கையைக் குவித்துக்கொண்டு "ரமேன்! நீ சொன்ன பிரகாரமே நடப்பேன். கஞ்சத்தனமான மனசுடன் சாக மாட்டேன்" என்றாள்.

ஒவ்வொரு சமயம் அவளுக்குத் தன் ஸ்மரணை குறைந்துகொண்டே வந்து மீண்டும் அணையும் விளக்குப் போல அவளது ஜீவன் சுடர் விட்டு எழுந்தது. தன் கணவனைப் பார்த்து, "எப்போ வருவாள் ஸரளா?" என்றாள்.

சற்று நேரத்துக்கொரு தரம், "ரோஷ்னி, ரோஷ்னி" என்று கூப்பிட்டாள். ஆயா அருகில் வந்து, "என்ன கொழுந்தே! என்ன வேண்டும்?" என்றாள் அழுத கண்ணீருடன்.

"என் மைத்துனரைச் சீக்கிரம் அழைத்து வா" என்றாள் நீரஜா.

இது ஆனதும் சிறிது நேரத்திற்கெல்லாம் அவள் தானாகவே பேசிக் கொண்டாள்:

"ரமேன்! இதெல்லாம் எப்படி முடியும்? கொடுத்து விடுகிறேன்; கொடுத்து விடுகிறேன் — எல்லாவற்றையும் கொடுத்து விடுகிறேன்."

## பதினைந்தாம் அத்தியாயம்
## சாந்தி

● இரவு மணி ஒன்பதிருக்கும். நீரஜாவின் அறையின் ஒரு மூலையில் மங்கலான ஒளி விடும் ஒரு மெழுகுவர்த்தி விளக்கு. காற்றில் ஸம்பங்கிப் பூவின் மணம் கலந்திருந்தது. திறந்த ஜன்னலிலிருந்து நன்றாகப் புலப்பட்டது, வெளியே உள்ள மரங்களின் கருநிழல். விருக்ஷங்களின் சிகைக்கு மேல் ஆகாயத்தில் காலபுருஷ நக்ஷத்திரக் கூட்டம். நித்திரையிலிருந்து நோயாளியை எழுப்பக்கூடாதென்று ஸரளாவைக் கதவருகிலேயே நிற்க வைத்து விட்டு ஆதித்தியன் ஓசைப் படுத்தாமலே நீரஜாவின் படுக்கை யருகே வந்து நின்றான்.

அவளுடைய உதடுகள் அசைவதைக் கவனித்தான். கிச்சப்தமாக ஏதோ ஜபம் செய்வது போலிருந்தது. பாதி நினைவும் பாதி மயக்கமும் கலந்த ஒரு பார்வை கண்களில். காதண்டை வாய் வைத்து ஆதித்தியன், "ஸரளா வந்திருக்கிறளே! கண்ணைத் திற" என்று மெதுவாகவே சொன்னான். கொஞ்சமாகக் கண்ணைத் திறந்த பிரிய கிரஜா, "நீ போயேன்" என்றதும், சற்றுப் பொறுத்து, "என் மைத்துனர் எங்கே? ரமேன்!" என்று நாலைந்து தரம் கூப்பிட்டாள்.

இதற்கு ஒரு பதிலும் வரவில்லை.

ஸரளா, அவளருகில் வந்து வணங்குவதற்காகக் காலைத் தொட்ட மாத்திரம், மின்னல் தீண்டியதுபோல் கிரஜாவின் சரீரமெல்லாம் வெட வெடவென்று நடுங்கிற்று. கால் தானாகவே நழுவியது. உடைத்த குரலில், "முடியவே முடியாது! கொடுக்க முடியாது! உஹூம்! கொடுப்பேனா!" என்று அவள் உரக்கச் சொல்லச் சொல்ல அசுர பலம் அவளது உடலில் எங்கிருந்தோ வந்தது. கண் பாப்பா இரண்டும் அளவுக்கு மீறி அகலமாகி ஒளிர்ந்தன. ஸரளாவின் கையை இறுக்கிப் பிடித்துக் கொண்டு, விகாரத்துவனியில், "உனக்கு இங்கே இடம் இல்லை போ! ராக்ஷஸி! — இடம் இல்லை போ! நான்தான் இங்கே இருப்பேன். இருப்பேன்!" என்று கூவினாள்.

ஆடை அலங்கோலமாகப் புரள ரத்தம் செத்துப் போய் வெளுத்திருக்கும் கிரஜாவின் சரீரம் படுக்கையை விட்டு எழுந்து நின்றது. அதிசயமான குரலில், "ஓடு, இங்கே நிற்கிறாயா? ஓடிப்போ! ஓடிப்போ! — இல்லாவிட்டால் உன் இருதயத்தை நித்தியம் குத்தி வருத்திக் கொண்டே இருப்பேன்; உறிஞ்சி விடுவேன், உன் ரத்தத்தை!" என்று சொன்னதுமே தரை மேல் துவண்டு விழுந்தாள் கிரஜா.

அந்த விகாரக் கூச்சலைக் கேட்டவுடன் ஆதித்தியன் தலைதெறிக்க அறையினுள் ஓடிவந்தான். பிராண சக்தி முழுவதையும் போக்கிவிட்டு கிரஜாவின் கடைசி வார்த்தை அடங்கி விட்டது.

முற்றும்

★ "இந்தாங்கோ, உங்களாத்தானே! குழந்தை தலையிலே ஒரு கை எண்ணெய் வைத்துத் தளிப்பாட்டி விடுங்களேன்!"

# அபாயம் நெருங்கிவிட்டது!

"நாடோடி"

● சீக்கிரமே நான் தற்சமயம் குடியிருக்கும் வீட்டைக் காலி பண்ணிவிட்டு வேறு வீடு பார்க்க வேண்டியதுதான். வேறு வழி இருப்பதாகத் தெரியவில்லை. அந்த மனிதரோ, இப்போதைக்குக் காலி பண்ணப் போவதாகத் தெரியவில்லை. நான் தான் காலி பண்ண வேண்டும்.

நான் இருக்கும் வீட்டில் உள்ள பக்கத்துப் "போர்ஷ"னுக்கு அவர் குடிவந்த அன்றே எனக்குச் சந்தேகம் தான். சரி, இத்தனை நாளாக நானும் சரசுவும் நடத்தி வந்த தாம்பத்ய வாழ்க்கைக்கு ஏதோ ஆபத்து நேரிடப் போகிறது என்றே பயந்தேன். அவருடைய சகதர்மிணியின் ஆட்டல், குலுக்கல், மினுக்கல் இவற்றிலிருந்தும் அந்த மனிதர் அந்த அபலையிடம் அசடு வழிய நடந்து கொண்டதிலிருந்தும் இது விஷயம் எனக்குப் பளிச்சென்று பட்டது.

அப்பொழுதே இதற்காக ஏதாவது நடவடிக்கை எடுத்திருக்கக் கூடாதா? வீட்டுக்காரரிடம் சொல்லி, அந்த மனிதர் பக்கத்துப் "போர்ஷ"னுக்குக் குடியேற வொட்டாமல் செய்திருக்கக் கூடாதா?

இதெல்லாம் ஒன்றும் செய்யாமல் பேசாமல் இருந்து விட்டேன். இப்பொழுது நான் எதிர்பார்த்ததே போல் நேர்ந்து விட்டது! பிறர் பார்த்து "கண் போடும்"படியாக அவ்வளவு அழகாக நடந்து வந்த எங்கள் தாம்பத்ய வாழ்க்கையின் அமைதி குலைந்து விட்டது! மூன்று நாளாக சரசு என்னோடு பேசுவதில்லை. அடுப்பில் பூனைக் குட்டிகள் வாசம் செய்கின்றன. எனக்கு "மைசூர் கபே"யி லிருந்து சாப்பாடு வருகிறது. சரசுவுக்குப் "பங்களூர் கபே"யிலிருந்து சாப்பாடு வருகிறது!

● நான் சற்றுப் பழைய காலத்து ஆசாமிதான். அதாவது இந்தக் காலத்துப் புருஷர்களைப் போல "நானும் புமடி, எதிரும் புதிருமடி" என்று எப்பொழுது பார்த்தாலும் சமையலறையில் உட்கார்ந்து கொண்டு மனைவிக்குக் கூடமாட "சித்துக் காரியம்" செய்து கொடுக்க எனக்குத் தெரியாது.

காலையில் எழுந்து ஸ்நான அறைக்குள் சென்றால் பல் தேய்க்க 'பிரஷ்'ஷும், செம்பில் ஜலமும் தயாராக இருக்கும். பல்லைத் தேய்த்து விட்டு வாசல் அறைக்கு வந்தால் வெள்ளி டம்ளரில் காப்பி தயாராகக் காத்துக் கொண்டிருக்கும். பிறகு பத்திரிகைப் படிப்பு, அடுத்த வீட்டு அனுசாமி அய்யருடன் வம்பளப்பு முதலியன நடத்தி விட்டு, சரியாக ஒன்பது மணிக்கு ஸ்நான அறைக்குள் நுழைந்தால் ஸ்நானம் செய்யத் தயாராக அண்டாவில் ஜலம் நிரப்பி வைக்கப் பட்டிருக்கும். ஸ்நானம் செய்து விட்டு, கூடத்துக்குப் போனால் இலையும், மனையும் போடப் பட்டு, பக்கத்தில் வெள்ளிக் கூஜாவிலும், டம்ளரிலும் குடிக்கத் தண்ணீர் வைக்கப் பட்டிருக்கும்.

ஒவ்வொன்றாக விஸ்தரித்துச் சொல்வானேன்? ஒரு காரியத்துக்கும் நான் சரசுவைக் கூப்பிட்டு, "இந்தா! இன்ன காரியத்தை ஏன் செய்ய வில்லை?" என்று கேட்கும்படியாக இருக்காது. என் என்பதற்கு முன் எண்ணெயாக எல்லாக் காரியங்களையும் என் மனது அறிந்து செய்து வைத்திருப்பாள். இதனால் நாங்கள் ஒருவருக் கொருவர் பேசிக் கொள்ள வேண்டிய பிரமேயம் கூட ஏற்பட வில்லையென்றால், பார்த்துக் கொள்ளுங்களேன்! நாங்கள் இப்படிப் பேசிக் கொள்ளாமல் இருந்ததைப் பார்த்து விட்டு, பக்கத்து வீட்டுக்காரர்களும் எதிர்த்த வீட்டுக்காரர்களும், அண்டை வீட்டுக்காரர்களும் எங்களுக்கிடையில் ஏதோ மனஸ்தாபம் என்று கூட நினைத்து வந்தனர்! அவர்கள் என்ன நினைத்துக் கொண்டு போகட்டும், என் வரையில் இந்த வாழ்க்கை எனக்குப் பிடித்துத்தான் இருந்தது. ஏன், சரசுவுக்கும் பிடித்துத் தான் இருந்தது என்று நினைக்கிறேன்.

● ஆனால் எங்கள் தாம்பத்ய வாழ்க்கையைக் குலைப்பதற்கென்றே ஏற்பட்



குலுக்கிக் கொண்டும் மினுக்கிக் கொண்டும்

டதுபோல் பக்கத்துப் "போர்ஷ"னில் இருந்த மனிதருக்கு மாற்றலாகி விட்டது! அவர் காலி செய்து, "டு லெட் எ போர்ஷன்" என்னும் பலகை தொங்க விட்டதும், விடாததுமாக இந்த மனிதர் குடி வந்து விட்டார்.

ஸ்திரீகள் இடுப்பில் தூக்கிக்கொண்டு வருவார்களே, அதைப் போல ஒரு மூன்று வயதுப் பையனை அவர் இடுப்பில் தூக்கிக்கொண்டு பின்னால் வர, முன்னால் குலுக்கிக் கொண்டும், மினுக்கிக் கொண்டும் வந்து சேர்ந்தாள் அவர் மனைவி. சரி, ஆசாமி தற்காலத்திய நவநாகரிக ஆசாமி போல இருக்கிறது என்று நான் நினைத்தேன். நான் நினைத்தது சரியாகப் போய் விட்டது.

தினம் காலையில் எழுந்து ஆபீஸ் போகிற வரைக்கும், சாயந்திரம் ஆபீஸிலிருந்து திரும்பி வந்து படுக்கப் போகிற வரைக்கும் ஆசாமி சமைய லறையிலேயே இருப்பார். மனைவிக்கு வேண்டிய "சித்துக் காரியங்கள்" முழுவதையும் இவர் செய்து கொடுத்துக் கொண்டிருப்பார்.

"இந்தாருங்கள்! உங்களைத்தானே! அந்த வெங்கலப் பானையைச் சற்று எடுத்துக்கொண்டு வாருங்கள் ... அந்த வெங்கலப் பானையில்லை. அதோ அந்தக் கற்சட்டிக்குப் பக்கத்தில் வைத்திருக்கிறேனே, அது!....எனக்குக் குளிக்கிறதற்கு நாழியாகிறது. இன்னும் பேசாமல் இருக்கிறீர்களே! எப்பொழுது ஜலம் நிரப்புவதாக உத்தேசம்?... இந்தாருங்கள், உங்களைத்தானே! குழந்தைக்குத் தலையில் ஒரு கை எண்ணெய் வைத்துச் சற்றுக் குளிப்பாட்டி விடுங்களேன்! அப்படியே, 'தாயி' பாத்திரங்களைத் தேய்த்துக் கிணற்றண்டை வைத்திருப்பாள், அவற்றை எடுத்துக் கொண்டு வாருங்களேன்!" என்று அந்த அம்மாள் தன் புருஷனை இடைவிடாது அதிகாரம் பண்ணிக் கொண்டிருக்கும் சப்தம் அடுத்த 'போர்ஷன்' சமையலறையிலிருந்து வந்து கொண்டேயிருக்கும்.

எனக்கு என்னமோ அந்த அம்மாள் தன் புருஷனை இப்படி "ஆட்டி வைத்துக் கூத்துக் காண்பதை"ப் பார்க்க மிகவும் பரிதாபகரமாகயிருக்கும். ஆனால் அவர் என்னமோ கன குஷியாகத் தான் எப்பொழுது பார்த்தாலும் சிரித்த முகத்துடன் வீட்டு வேலைகளைக் கவனித்துக் கொண்டிருப்பார்.

குழந்தை சட்டையைத் துவைத்துப் போடுவார். குழந்தைக்குத் தலைவாரிப் பின்னி விடுவார். 'தாயி'யை வேலை வாங்குவார். எல்லாரும் குளிப்பதற்கு ஜலம நிரப்பி வைப்பார். பிறகு கட்டைகளை வெயிலில் உலரப் போடுவார். பாதி வேளை அடுப்பை மூட்டித் தாமே காப்பி போட்டு வைப்பார். சாப்பிடுவதற்கு இலை போட்டு, தீர்த்தம் எடுத்து வைப்பார். வளர்த்தி வளர்த்திக் கூறுவானேன்? பழைய கால மோஸ்தர் ஆசாமிகளாகிய நாங்கள் ஸ்திரீகள்தான் செய்ய வேண்டும், புருஷர்கள் செய்யக் கூடாது என்று எதிர்பார்க்கும் எல்லா வேலைகளையும் அவர் செய்வார்.

ஒவ்வொரு சமயம் அவரைப் பார்க்கும் போதெல்லாம் எனக்குக் கோபம் கோபமாக வரும். குலத்தைக் கெடுக்க வந்த கோடரிக் காம்பு போல இப்படி புருஷ சமூகத்துக்கே அவமானம் தேடி வைக்கிறாரே என்று ஆத்திரம் ஆத்திரமாக இருக்கும். ஆனால் அடுத்த கணமே, "எப்படியாவது போய்விட்டுப் போகிறார், பாவம்! அவர் பாடு, அவர் பெண்டாட்டி பாடு!" என்று பச்சாத்தாபப்படத் தோன்றும்.

● ஆனால் இந்தக் காரியம் வெகு நாள் அவர் பாடு, அவர் பெண்டாட்டி பாடு என்று இருக்கவில்லை.

ஒரு நாள் காலையில் படுக்கையை விட்டு எழுந்ததும் ஸ்நான அறைக்குச் சென்றேன். வழக்கமாக அங்கு காணப

படும் பிரஷ்ஷையும், செம்பு ஜலத்தை யும் காணவில்லை.

"ஏன் பிரஷ்ஷும் செம்பு ஜலமும் வைக்கவில்லை?" என்று சரசுவைக் கேட்டேன். "நீங்கள்தான் கொஞ்சம் எடுத்துக் கொள்ளக் கூடாதா!" என்ருள் சரசு.

அடுத்த நாள் பல் தேய்க்கப் பிரஷ்ஷும், செம்பு ஜலமும் நானே எடுத்துக் கொண்டேன். ஆனல் மேஜையில் வழக்கமாகக் காணப்படும் காப்பியைக் காணவில்லை. "ஏன் மேஜையில் காப்பி வைக்கவில்லை?" என்று சரசுவைக் கேட்டதற்கு. "ஏன், நீங்கள்தான் கொஞ்சம் உள்ளே வந்து வாங்கிக் குடித்தால் என்ன? ஒவ்வொருத்தரைப் போல் கூடமாட ஒத்தாசை பண்ணு விட்டாலும் இது கூடச் செய்யக் கூடாதா?" என்று சற்று கடுமையாகச் சொன்ருள்.

அடுத்த நாள் பல் தேய்ப்பதற்கு வேண்டிய உபகரணங்களை நானே எடுத்துக் கொண்டேன். சமையலறைக் குப் போயே காப்பி வாங்கிக் குடித் தேன். ஆனல் பத்திரிகைப் படிப்பு, வம்பளப்பு முதலியன முடித்து விட்டுச் சாப்பிடுவதற்காக உள்ளே சென்ற போது இலையையும் காணும், மணை யையும் காணும்! ஏன் என்று கேட்ட தற்கு சரசு என்மீது சீறி விழுந்தாள். "ஒரு நாள்தான் நீங்கள் இலையை எடுத்துப் போட்டுக்கொண்டால் என்ன வந்துவிட்டதாம்? எல்லார் வீட்டுப் புரு ஷர்களும் இப்படியா எல்லாவற்றுக்கும் பெண்டாட்டியையே அதிகாரம் பண் ணிக் கொண்டிருக்கிருர்கள்?" என்ருள்.

எனக்குக் கோபம் தாங்கவில்லை. இருந்தாலும் மிகவும் கஷ்டப்பட்டு அடக்கிக் கொண்டேன். "சரசுவைக் குற்றம் சொல்லிப் பிரயோசனமில்லை. இந்தப் பக்கத்துப் 'போர்ஷன்' பிரா மணன் தன் பெண்டாட்டிக்குக் காரியம் செய்து கொடுப்பதைப் பார்த்துவிட்டுத் தான் இப்படிச் சொல்கிருள். சீக்கிரமே இந்த வீட்டை விட்டு ஒன்று நாம் காலி பண்ண வேண்டும், அல்லது அவர் பண்ண வேண்டும்" என்று நினைத்துக் கொண்டேன்.

ஆனல் அடுத்த நாளே சரசு இப்படி என் தலையில் கல்லைத் தூக்கிப் போடு வாள் என்று நான் நினைக்கவில்லை. மூன்ரும் நாளும் வழக்கம்போல் பிரஷ் ஷையும், செம்பு ஜலத்தையும் நானே தேடி எடுத்துக்கொண்டு பல் தேய்த்து விட்டு, சமையலறைக்குள் நுழைந்து காப்பி சாப்பிட்டு விட்டு, இதற்குள் வாசலில் வம்பளப்பதற்காகத் தயா ராகக் காத்துக் கொண்டிருந்த அடுத்த வீட்டு அண்ணுசாமி அய்யரைப் பார்ப் பதற்காகத் திரும்பினேன். சரசு கூப் பிட்டாள்.

"இந்தாங்கோ! உங்களைத்தானே! நான் கொஞ்சம் கைக் காரியமாக இருக் கிறேன். சறுக் குழந்தை தலையிலே ஒரு கை எண்ணெய் வைத்துக் குளிப்பாட்டி விடுங்களேன்!" என்ருள்!

இதைக் கேட்டதும் என் காதுகளையே என்னல் நம்ப முடியவில்லை. அந்தப் பாழும் மனிதர் தம் பெண்டாட்டிக்கு வேலை செய்யப் போக சரசு நம்மைப் பார்த்து அதிகாரம் பண்ண ஆரம்பித்து விட்டாள், பார்த்தாயா என்று ஆத்திரம் வந்தது. எனக்கு வந்த கோபத்தில் சரசுவின் கன்னத்தில் பளார் என்று ஒரு அறை கொடுத்து விட்டேன்.

அவ்வளவுதான். மூன்று நாட்கள் ஆகி விட்டன, நாங்கள் ஒருவரோ டொருவர் பேசிக்கொண்டு. சீக்கிரமே நான் தற்சமயம் இருக்கும் வீட்டைக் காலி பண்ணி விட்டு வேறு வீடு பார்க்க வேண்டியதுதான். யாராவது வீடு இருக் தால், சொல்லுங்கள்!

## படித்துப்பார்

### சோவியத் செஞ்சேனை ★

[ ஆசிரியர் : கே. ராமநாதன் ; பிரசுரம் : நவசக்தி காரியாலயம், சென்னை ; விலை : அணா 4 ]

"பாஸிசக் கரும் பூதத்தை எதிர்த்து உலக மக்களின் விடுதலைக்காக உக்ரப் போர் விளைத்து வரும் செஞ்சேனை"யைப் பற்றிய ஏராளமான விவரங்கள் இந்தப் புத்தகத்தில் சுருக்கமாகத் தரப்பட்டிருக்கின்றன. செஞ்சேனை வீரர்கள் ஒவ்வொருவரின் உள்ளங்களிலும் குமுறும் வீரதீரத்தையும் தேச பக்தியையும், ஆசிரியர் அழகாக எடுத்துக் காட்டுகிறார். ருஷ்ய வீரர்களை உதாரணமாக எடுத்துக் காட்டி, "பாரத மக்களே! நீங்கள் என்ன செய்யப் போகிறீர்கள்! செஞ்சேனையின் வீர சாகஸம் உங்கள் உள்ளத்தில் உத்வேக நெருப் பூட்டவில்லையா?" என்று கேட்கிறார் ஆசிரியர். சுதேசிக் காகிதத்தில் தயாரான இந்தப் புத்தகம் பார்க்கும்போதே உத்வேகத்தை ஊட்டுகிறது.

### ஜயபதி (சினிமாக் கதை) ★

[ ஆசிரியர் : ஆங்கரை சந்தானம்; பிரசுரம் : நவரஸப் பிரசுராலயம், லால்குடி ; விலை : அணா 14. ]

போதிய பணமும் சினிமாப் படம் பிடிக்க வேண்டுமென்ற ஆசையுமிருந்தும் "ஐயோ! கதை கிடைக்கவில்லையே!" என்று கையைப் பிசைந்து கொண்டிருப்பவர்களுக்குத் தைரியம் கூறுகிறோம். அவர்கள் ஜயபதி என்ற இந்த சினிமாக் கதையைத் தயவு செய்து வாங்கிப் பார்க்கட்டும். இந்தக் கதை அவர்களுக்கு உபயோகப்பட்டால் ரொம்ப நல்லது; இல்லாவிட்டால் மறுபடியும் கையைப் பிசைந்து கொண்டே இருக்கட்டும்!

### பொது விஞ்ஞானம் ★

[ஆசிரியர்கள் : ஸர் முத்தையா செட்டியார் ஹைஸ்கூல் விஞ்ஞான உபாத்தியாயர்கள்; விலை : அணா 12.]

உடல் கூறு சாஸ்திரம், பிராணி நூல், தாவர நூல், பௌதிக சாஸ்திரம், ரஸாயன சாஸ்திரம் — முதலிய விஞ்ஞானப் பகுதிகளைப் பற்றித் தெரிந்து கொள்ள வேண்டிய முக்கிய அம்சங்கள் எளிய தமிழ் நடையில் கூறப்பட்டிருக்கின்றன. இது எஸ். எஸ். எல். ஸி. பரீட்சைக்குப் போகும் மாணவர்கள் பரீட்சை தேறுவதற்காகவே எழுதப் பட்டிருக்கிறது.



## அரட்டைக் கச்சேரி

● என்ன வராகசாமி அய்யர்! மார்பிலே சந்தனம் ரொம்ப பலமா யிருக்கே?

ஊரிலே கல்யாணம், மார்பிலே சந்தனம். இது தெரியவில்லையா, உமக்கு?

கல்யாணமா? யாருக்கய்யா கல்யாணம்?

என் மாமா பெண்ணுக்கு.

என்ன வரதட்சிணையோ?

நாலாயிரம் ரூபாய்.

நாலாயிரம் ரூபாயா? பையனுக்கு நானூறு, ஐந்நூறு சம்பளமோ?

அதெல்லாம் ஒன்று மில்லே. ஏதோ நாற்பதோ, ஐம்பதோதான் சம்பாதிக்கிறான்.

நாற்பதோ, ஐம்பதோ சம்பாதிப்பவனுக்கா நாலாயிரம் ரூபாய் வரதட்சிணை?

எல்லா சாமானும் விலை உயர்ந்து விட்டது போல் இப்பொழுது மாப்பிள்ளைகளின் விலையும் உயர்ந்துவிட்டது.

அத்தனை வரதட்சணை கொடுப்பானேன்? பேசாமல் பெண்ணைப் படிக்க வைக்கிறது தானே?

உமக்கு முன்னாலேயே இந்த யோசனை எங்களுக்குத் தோன்றிப் பெண்ணை பி. ஏ. வரை படிக்க வைச்சாச்சு. அதற்கு மேலே என்ன பண்ணுகிறது?

இதென்ன, பெரிய கூத்து?

கூத்துத்தான் ஸ்வாமி, கூத்துத்தான்! வரதட்சிணைக் கொடுமைக்குப் பயந்து கொண்டு, எல்லோரும் பெண்களைப் படிக்க வைத்தார்கள். ஆனால் இதனால் வரதட்சிணைக் கொடுமை ஒழிந்ததா? இல்லை. பெண்கள் ஆயுள் முழுவதும் படிக்க முடியுமா, என்ன? படிப்பு முடிந்ததும் திரும்பவும் கல்யாணத்தைப் பற்றித்தான் யோசிக்க வேண்டி யிருக்கிறது. ...... ஆமாம், நீர் என்ன யோசனை பண்ணுகிறீர்?

இல்லை, இந்தக் காலத்தில் கலியாணத்துக்கு இருக்கிற எல்லாப் பெண்களுமே படித்த பெண்கள் தான் என்று சொல்லுகிறீரோ?

ஆமாம், ஏன்?

அப்படியானால் நான் கலியாண யோசனையையே மூட்டை கட்டி வைத்துவிட வேண்டியதுதான். படித்த பெண்ணைக் கலியாணம் பண்ணிக் கொண்டு யார் ஐயா, கஷ்டப் படுகிறது?

இதற்காகக் கல்யாண யோசனையை மூட்டை கட்டுவானேன்? பத்திரிகைகளில் "மணமகன் தேவை. படிக்காத பெண்ணாயிருந்தால் வரதட்சிணை வேண்டியதில்லை" என்று ஒரு விளம்பரம் போட்டுப் பாரும். ஆவணியில் கல்யாணஞ்செய்து விடலாமே.

# ஊக்கத்துக்கு உயர்துணைவன்.

எல்லோராவில் கைலாசநாதர் கோவில் மதிற்களில் உள்ள சிற்ப நயங்களைக்கண்டு நீங்கள் அதிசயப்படுகிறீர்கள். அதற்கு ஊக்கமளித்த சக்தி எது என்பது உங்களுக்குக் கட்டாயம் தெரிந்திருக்கும். பெண்மையின் லக்ஷியம் தெய்வ களையை அங்கே பெறுகிறது. நமது அன்றாட வாழ்விலும் அது மானுஷிக எல்லையை மீறுகிறது. பெண் அன்போடும் பாசத்தோடும் பணிவிடை செய்வதைப்போல் அதிசயம் வேறு என்ன? நாள் முழுவதும் உழைத்துவிட்டு சோர்வடைந்துவரும் கணவனுக்கு ஒரு கோப்பை தேயிலைபானம் தயாரித்துக் கொடுப்பதுபோல் திருப்தி அளிப்பது வேறு என்ன? அன்பு ததும்பும் கோப்பை அவனுக்கு சோர்வை அகற்றுகிறது. அவன் மனமும் கலகலக்கிறது.



“நித்திய கர்மா” என்ற எங்கள் புது சித்திரங்களுடன் கூடிய புத்தகம் எந்தெந்த நேரத்திலெல்லாம் தேயிலை பானம் - பருகலாம் என்பதைப்பற்றி விவரிக்கிறது. இந்த விளம்பரத்தைக் கத்தரித்து உங்கள் பெயர் விலாசம் முதலியவற்றுடன் கீழ்கண்ட விலாசத்துக்கு அனுப்பவும். இந்திய தேயிலைக் கமிஷனர், இந்தியன் டீ மார்கெட்டு எக்ஸ்பான்ஷன் போர்டு, தபால் பெட்டி நெ. 2172, கல்கத்தா.



## குடும்பத்திற்கு ஏற்ற ஒரே பானம்

# இந்தியன் டீ



இந்தியன் டீ மார்கெட் எக்ஸ்பான்ஷன் போர்டாரால் வெளியிடப்பட்டது

IN 262

★ "புருஷன் மனைவிக்கு என்ன பசையது என்ன? அவன் நடுவில் வந்தவன்தானே! அவளுக்கு அண்ணா தான் உசத்தி!"

# இரண்டு பாசங்கள்.

[கு. ப. ராஜகோபாலன்]

ராகவன் காலையில் ஆபீஸிலிருந்து வந்ததும் கோமளம் சிற்றுண்டியையும் காப்பியையும் எடுத்துக்கொண்டு போய் மேஜை மேல் வைத்துக் கொண்டே வெகு உற்சாகமாக, "காலையில் சொல்ல மறந்துவிட்டேன். கடைக்குப் போய் ஒரு விசை பட்டணம் பாக்கும் நல்ல ஸெலுலாய்ட் பொம்மை யொன்றும் வாங்கிக் கொண்டு வாருங்கள்" என்றாள்.

"எதற்கு?" என்று கேட்டான்.

"எதற்கா? அப்பாவுக்குப் பட்டணம் பாக்கு பிடிக்கும். அண்ணா குழந்தைக்குப் பொம்மை!"

ராகவனுக்குக் கோபம் வந்தது. ஆனால் அதை அடக்கிக் கொண்டு, "உங்கப்பா எனக்கு என்ன அனுப்பியிருக்கிறார்? உன் அண்ணா எனக்கு என்ன கொண்டு வந்திருக்கிறான்?" என்று ராகவன் தன் மனதில் உள்ளதை ஹாஸ்யத்தில் மறைக்க முயன்றான்.

"நான்தான் இருக்கிறேனே!" என்றாள் கோமளம்.

ஆனால் மேலே பேச்சு ஓடவில்லை. அவன் மௌனமாகச் சிற்றுண்டியைத் தொடாமல் காப்பியை எடுத்துக் குடித்தான். பிறகு கையில் கொண்டு வந்திருந்த ஆபீஸ் காகிதங்களைப் பார்க்க ஆரம்பித்தான்.

ராகவனுக்குச் சென்னை செக்ரடேரியட்டில் வேலை. மனைவியுடன் தனிக் குடித்தனம் வைத்து ஒரு வருஷம்தான் ஆயிற்று.

சிறிது நேரத்துக்கெல்லாம் கோமளம் அவனிடம் வந்து, "நேற்றே 'கண் எரிகிறது, எண்ணெய் தேய்த்துக் கொள்ள வேண்டும்' என்று வெந்நீர் போடச் சொன்னீர்கள். மறந்து போய் விட்டேன். இப்பொழுது போட்டிருக்கிறேன். ஸ்நானம் செய்கிறீர்களா?" என்றாள்.

"நேற்று மறந்து விட்டாய். இன்று உன் அண்ணா வந்திருக்கிறான் — மறக்காமல் போட்டிருக்கிறாய்!" என்று ராகவன் மனதிலிருந்ததைச் சொன்னான்.

கோமளத்தின் முகம் சற்று மாறுதல் அடைந்தது. புருஷன் முகத்தைப் பார்த்தாள். அதில் லேசான மனஸ்தாபக் குறி தென்பட்டது. அதைத் தான் அறிந்ததாகக் காட்டிக் கொள்ளாமல், அவன் மன நிலையை மாற்ற எண்ணி, "நான் ஊருக்குப் போகிறேனே, இன்று லீவு வாங்கிக் கொள்ளக் கூடாதா?" என்று கெஞ்சினாள்.

"லீவு இப்பொழுது கிடைக்காது!" என்று தலை நிமிராமல் காகிதங்களைப் பார்த்தபடியே சொன்னான்.

"சாப்பாடு, ஊப்பிலா அல்லது ஸெட் எடுத்துக் கொண்டு வந்தா? ஊறுகாய் பெரிய ஜாடியில் —"

"நான் எப்படியாவது செய்து கொள்ளுகிறேன்!"

"சரி, அண்ணாவோடு உட்கார்ந்து சாப்பிடுங்கள்!"

"இல்லை, நான் அவசரமாக ஆபீஸ் போக வேண்டும். இலை போடு!"

"அண்ணாவோடு நீங்கள் சரியாகப் பேசக்கூட இல்லையே!"

"உனக்கேதான் அவனுடன் பேசப் பொழுது போதவில்லையே!"

கோமளத்துக்குக் கோபம் பொங்கிக் கொண்டு வந்தது. ஆனால் தனியாக விட்டு விட்டுப் போகிறாரே என்ற நினைப்பில் கோபத்தை அடக்கிக் கொண்டாள்.

ராகவன் ஏன் அன்று அந்த மாதிரி இருந்தான் என்று அவளுக்கு விளங்கவில்லை. எப்பொழுது பார்த்தாலும் வேடிக்கையும் விநோதமுமாகவே பேசிக் கொண்டிருப்பவனாயிற்றே.

காரணம், ராகவன் மனப் போக்கு வேறு விதமாக இருந்தது. புருஷனை விட்டுவிட்டுப் போகிறோமே என்று கோமளத்தின் மனதில் கலக்கம் கொஞ்சங்கூட இருந்ததாக அவனுக்குத் தோன்றவில்லை. அண்ணாவைக் கண்டதும் அவளுக்குத் தலை கால் புரியவில்லை. பிறந்தகமதான — அதற்காக? புருஷன் ஒன்றுமில்லையா? உண்மையாகவே

அவளுக்குப் புருஷன் மேல் அவ்வளவு வாஞ்சை இருந்தால் இந்த மாதிரியாக வல்லவா பேச்சு நடக்கவேண்டும் :—

"இப்பொழுது எதற்கு ஒரு பிரமேயமு மில்லாமல் என்னைக்கூட்டிக் கொண்டு போகிறீர்கள்?"

"வெகு நாட்களாயிற் றல்லவா? பார்க்க வேண்டுமென்று இராதா அவர்களுக்கு?"

"இருக்கும் தான்! இங்கே சமயம் சரியாக இல்லையே! உங்களுக்கு ஆபீஸில் வருஷாந்திரக் கணக்குகள் தயார் செய்யும் சமயம். வேலையில் இரவு பகலாகத் திண்டாடுகிறீர்கள். இதில் இளைப்புச் சோறு வேறே என்றால்!"

"ஆபீஸ் வேலை சமுத்திரம். அது அலை ஓய்ந்து போவதென்றால் முடியவே முடியாது."

"அப்படியென்றால் நான் இப்பொழுது போகவில்லை. அண்ணா போகட்டும். வேலை கொஞ்சம் ஓய்ந்த பிறகு போகிறேன்."

"சீச்சீ, வந்தவனை சும்மா அனுப்புவது நன்றாக இராது. நான்கு நாட்கள் இருந்துவிட்டு வந்துவிடு!"

தன் அண்ணன் வந்ததிலிருந்து கோமளம் நடந்துகொண்ட விதம் ராகவனுக்குத் தன்னை அசட்டை செய்வது போலிருந்தது. தன்னைக் காட்டிலும் அதிகமாக அவள் அண்ணனிடம் வாஞ்சை கொண்டிருந்தாள் போலிருக்கது. தன்னிடம் அன்பு காட்டாததால் வருத்தம்; பிறரிடம் அன்பு காட்டியதால் அசூயை.

புருஷன் மனைவிக்கு என்ன செய்து என்ன? எப்படிப் போற்றி என்ன? நடுவில் வந்தவன்தானே? அவளுக்கு அண்ணாதான் உசத்தி!

இரவு சாப்பிடும்பொழுது அண்ணனுக்கு எல்லாம் கேட்டுக் கேட்டுப் பரிமாறினாள். சாப்பிட்ட பிறகு முதலில் அவனுக்குக் கொண்டு போய்ப் பாலைக் கொடுத்தாள்.

"அத்திம்பேருக்குக் கொடுத்தாயோ?" என்று அவன் கேட்டான்.

"கொடுக்கிறேன், நீ சாப்பிடு!" என்று சொல்லிவிட்டுப் பிறகு புருஷனுக்குப் பால் கொண்டு போனாள்.

"இன்று வேண்டாம். வயிறு நிரம்பி விட்டது!" என்றான் ராகவன். கோமளம் வற்புறுத்தவில்லை.

ரயிலுக்குப் புறப்பட ஆயத்தமானார்கள்.

"நீங்கள் வருகிறீர்களா ஸ்டேஷனுக்கு?" என்று கோமளம் ஆவலுடன் கேட்டாள்.

"இல்லை, எனக்கு வேலை இருக்கிறது. சேவகனை அனுப்புகிறேன்."

புறப்படும்பொழுது மைத்துனன் ராகவனிடம் வந்து "போய் விட்டு வரட்டுமா?" என்றான்.

"சரி!" என்று மட்டும்தான் சொன்னான் ராகவன்.

கோமளம் வந்து "போய் விட்டு வரட்டுமா?" என்றாள் மெதுவாக.

"போய் விட்டு வாயேன்! அடே வரதராஜு! வண்டியில் சௌகரியமாக ஏற்றிவிட்டு வா!" என்றான்.

அவர்கள் போன பிறகு வாசற் கதவைத் தாளிட்டுக் கொண்டு ராகவன் மேஜையண்டை வந்து உட்கார்ந்தான். வேலை ஓடவில்லை.

எதிரே அலமாரியில் கண்ணுக்குத் தெரிகிறபடி பெரிய கண்ணாடி ஜாடி நிறைய மைசூர்ப் பாகு இருந்தது.

"ஊருக்குக் கொண்டு போகத்தான் அவ்வளவு அவசரமாகச் செய்தாள் என்று நினைத்தேன்!" என்று தனக்குள் சொல்லிக் கொண்டான்.

மேஜையைப் பார்த்தான். வெற்றிலைப் பெட்டி பளிச்சென்று தேய்த்து வைக்கப்பட்டிருந்தது. உள்ளே அறை நிறைய வாசனைப் பாக்கு — கரண்டான் நிறையப் புதுச் சுண்ணாம்பு. ஒரு தடவை



போட்டுக் கொள்ள வெற்றிலை கூட மடித்து வைக்கப்பட்டிருந்தது.

புறப்படுவதற்குமுன் ஏகாந்தமாக அவனுக்கு அதைக் கொடுத்துவிட்டு விடை பெற்றுக் கொள்ள எண்ணியிருந்தாளோ? பல ஊகங்கள் உதித்தன. அவன் கண்கள் கலங்கின.

வெற்றிலையை எடுத்துப் போட்டுக் கொண்டே ராகவன் தலை நிமிர்ந்து பார்த்தான். கோமளத்தின் புகைப் படம் அவனைப் பார்த்து மகிழ்ச்சிப் புன்னகை புரிந்தது. அவன் படம் இருந்த இடமல்லவா? அப்படியானால் அவன் படமெங்கே? அவள் எடுத்துக் கொண்டு போயிருக்க வேண்டும்!

ராகவன் மனது இப்பொழுது வேறு விதமாக வேதனை கொள்ள ஆரம் பித்தது.

பிறந்து பதினைந்து வருஷங்கள்தானே பிறந்தக வாழ்வு? பிறகு புக்ககம் தானே? புருஷன் வீட்டில் இருப்பவள் 'பிறந்தகத்துக்கு ஏங்குவது இயற்கை ஆகாதா? தன் வீட்டுக்கு வந்த அண்ண னுக்குப் பெருமையுடன், தான் அந்த வீட்டு யஜமானி என்ற இறுமாப்புடன், உபசாரம் செய்வதில் என்ன தப்பு? அந்த சமயம் அவள் புருஷனை விட கொஞ்சம் அதிகமாகவே அண்ணனுக்கு உபசாரம் செய்வது புருஷனிடம் அவள் கொண்ட நம்பிக்கையையும் பாத்தி யதையையும்தானே காட்டுகிறது? அது அசட்டை யல்ல, வாஞ்சைக் குறை வல்ல — புருஷனும் தானும் நெருங்கி நின்றதன் பலனாக ஏற்பட்ட பரிபூரண நம்பிக்கை.

அவள் செய்து வைத்திருந்ததை யெல் லாம் பார்த்தபோது அசட்டையாக இருந்தாள் என்று சொல்ல முடியுமா?

கொஞ்சங் கொஞ்சமாக எண்ணிப் பார்க்கப் பார்க்கத் தான் அன்று கோமளத்திடம் நடந்துகொண்ட மாதிரி சுத்த கேவலமானது, குரூரமானது என்று அவனுக்குத் தோன்றலாயிற்று. அவனுக்கு இருப்புக் கொள்ளவில்லை எழுந்து அங்குமிங்குமாக உலாவினான்.

திடீரென்று ஜன்னலில் ஒரு பக்க மிருந்த பொட்டணமும், ஸெல்லுலாய்ட் பொம்மையும் அவன் கண்களில் பட் டன. மறந்து விட்டாளா? அல்லது அவன் நடந்துகொண்ட நிலையில் — ?

கடிகாரத்தைப் பார்த்தான். வண்டி புறப்பட அரைமணி நேரம் இருந்தது. பர்ஸை ஷர்ட் பையில் போட்டுக் கொண்டு பொட்டணத்தையும் பொம் மையையும் எடுத்துக் கொண்டு பஸ் ஏறி ஸ்டேஷன் சென்றான். ஓடிப் போய் பிளாட்பாரத்தில் நுழைந்தான். நல்ல வேளை, வண்டி இன்னும் புறப்பட வில்லை.




அவனைக் கண்டதும் இருவரும் திகைத்துப் போனார்கள். கோமளத் தைத் திரும்பக் கூட்டிக் கொண்டு போகத்தான் வந்து விட்டானோ என்று இருவருக்கும் ஏக காலத்தில் தோன் றிற்று. ஆனால் உடனே அவன் கையி லிருந்த பொட்டணத்தையும் பொம்மை யையும் பார்த்ததும் கோமளம் கை நீட்டி "மறந்தே போய்விட்டேன்!" என்றாள்.

"நீ மறந்து போகணும், நான் எடுத் துக் கொண்டு இங்கே ஓடி வரணும், அப்படித்தானே!" என்று ராகவன் முக மலர்ச்சியுடன் சிரித்துக்கொண்டே அவற்றை அவளிடம் கொடுத்தான்.

வண்டி ஊதிவிட்டது.

கோமளம் ஜன்னலண்டை நின்று புருஷன் முகத்தைப் பார்த்து அபூர்வ திருப்தி அடைந்தாள். அப்பொழுது அந்த மகிழ்ச்சியுடன் சிவந்த முகம் ராகவனுக்கு மெய் மறதியைக் கொடுத் தது. ஒன்றும் பேச முடியவில்லை.

"கடிதம் போடு!" என்றான்.

"உடம்பு ஜாக்கிரதை!" என்று கோமளம் நெஞ்சடைக்க மொழிந்தாள் இரண்டு பாசங்களால் இழுக்கப்பட்டு.

# உடைந்த வளையல்

[ து. ரா. ]

## இருபத்திமூன்றும் அத்தியாயம்
## இரண்டு பைத்தியங்கள்!

அறையை விட்டு வெளிப்பட்டு, தங்கமணி 'பால்கனி'க்கு வந்தான். அங்கே எப்பொழுதும் போட்டிருக்கும் சாய்வு நாற்காலியில் சர்மா படுத்திருந்தார். தங்கமணி வந்ததும், "ஏன், தூக்கம் வரவில்லையா?" என்று கேட்டார்.

"இல்லை; அறைக்குள் ஒரே புழுக்கமாய் இருக்கிறது" என்று சொல்லிவிட்டு, "உங்கள் தலை வலி எப்படி இருக்கிறது?" என்று விசாரித்தான்.

சர்மா "தேவலை" என்றார். தங்கமணி கைப்பிடிச் சுவரின் மேல் உட்கார்ந்தான். சர்மா பேச ஆரம்பித்தார்:

"ஒரு சமாசாரம் சொல்ல மறந்து போனேன். இன்று ஒரு கடுதாசு வந்தது. திருவிடைமருதூரிலிருந்து மதுரத்தின் மச்சினன் குஞ்சிதபாதம் ஐயர் எழுதியிருக்கிறார்."

"என்ன எழுதியிருக்கிறார்?"

"நான் அவருக்கு எழுதினேன் அல்லவா, மதுரத்துக்குச் சொத்து ஏதாவது கொடுத்தாக வேண்டும் என்று? அதற்குத்தான் 'டில் எழுதியிருக்கிறார். இப்பொழுது எனக்கு என்னமோ நல்ல காலம்தான், அவாளுக்கும் கொஞ்சம் புத்தி வந்திருக்கிறது. கேஸ் ஒன்றும் வேண்டாம். 'எங்கள் அண்ணா மனைவி என்றால் எங்களுக்கு அக்கறை இல்லையா? நீங்கள் நேரில் வாருங்கள். நாம் பேசிக் காரியத்தை செட்டில் பண்ணிக் கொள்ளலாம்' என்று எழுதியிருக்கிறார். ஒரு கவலை விட்டது" என்றார் சர்மா.

அவருடைய கவலையைக் குறையச் செய்த அதே விஷயம் தங்கமணியின் மனதில் நடந்துகொண்டிருந்த போராட்டத்தின் வேகத்தை அதிகப்படுத்திற்று. "இவரும் நம்மைச் சந்தேகிக்கிறார் போலிருக்கிறது. அதனால்தான் எப்படியாவது ஓர் ஏற்பாடு செய்து மதுரத்தை ஊருக்கு அனுப்பிவிடலாமென்று பார்க்கிறாராக்கும். அதனால்தான் கவலை விட்டது என்கிறார்" என்று நினைத்துக் கொண்டான்.

யோசிக்க யோசிக்க, அவன் மூளை கொதிப் பெடுத்தது. எல்லோர் மேலும் கோபம் உண்டாயிற்று. என்ன உலகம், என்ன ஜனங்கள்! நல்லவன் கெட்டவன் என்ற வித்தியாசம் தெரியாதா இந்த உலகத்துக்கு! காரணமில்லாமல் ஒரு மனிதன் பெயரைக் கெடுத்து, அவன் குடும்பத்தின் சந்தோஷத்தைக் குலைத்து, அவன் வாழ்வைப் பாழ்படுத்துகிற கண்ணில்லாத உலகம்!

கோபமும் ஓர் எல்லையைக் கடந்து விட்டால் சட்டென்று அடங்கிப் போய் விடுகிறது. தங்கமணியின் மனமும் இப்படி யெல்லாம் சட்டென்று ஒரு நிதானத்துக்கு வந்தது. எல்லோரையும் பற்றி ஓர் அலக்ஷியமான எண்ணம் ஏற்பட்டு விட்டது அவன் மனதில். நம்மைக் கேலி பண்ணும் உலகத்தைத் திருப்பி நாம் கேலி பண்ணி விட்டால் என்ன? எல்லோரும் நம்மைப் பார்த்துச் சிரித்தால், நாம் அவர்களைப் பார்த்துச் சிரித்து விட்டால் போகிறது. நாம் செய்யாத காரியத்தைச் செய்தோம் என்கிறார்கள். அப்படியே அதைச் செய்து விட்டால்தான் என்ன? இனி மேல் ஒன்றும் முழுகிப் போகப் போகிறதில்லை. யாருக்கு நஷ்டம்? நம் மீது சந்தேகப் படுகிறவர்களுக்குத் தானே? நன்றாய் வேண்டும் அவர்களுக்கு?

இவ்வாறு யோசித்துக் கொண்டே மறுபடி போய்ப் படுத்துக் கொண்டான். அப்பொழுதும் யோசனை நிற்கவில்லை. "இந்த ஊருக்குத் தலை முழுகி விட்டுப் போய் விடலாம். கூடவே மதுரத்தையும் அழைத்துக் கொண்டு போய் விடுகிறேன். நான் கூப்பிட்டால் வரமாட்டாளா, பார்க்கலாம். அப்புறம் இவர்கள் எல்லாம் வாயில் விரலை வைத்துக்கொண்டு முழிக்கட்டும். சுசீலாதான் இப்பொழுது நம்முடன் பேசுகிறது கூட இல்லை —" என்று எண்ணினான்.

அதற்கடுத்த இரண்டு நாட்களும் மெதுவாக ஊர்ந்து சென்றன. மதுரத்துடன் பேசுவதற்குத் தங்கமணிக்குச் சந்தர்ப்பம் கிடைக்கவில்லை. அவளிடம் என்ன சொல்வது, எப்படிச் சொல்வது என்று யோசித்துக் கடைசியில் ஒரு முடிவுக்கு வந்தான். "நான் வடக்கே போகிறேன். என்னுடன் வருகிறாயா?"

என்றால் அவன் மாட்டேன் என்று சொல்ல மாட்டாள். கண்டிப்பாய் வருவாள். அப்படி அவள் வருகிறேன் என்றால், அவளையும் கூட அழைத்துக் கொண்டு போகிறேன்—என்று நிர்மானித்தான்.

அன்று புதன் கிழமை. காலையில் காப்பி சாப்பிடுகையில் தங்கமணி, சுசீலாவைப் பார்த்து "வெள்ளிக் கிழமை போகலாம என்று நிர்மானம் பண்ணி இருக்கிறேன். ராத்திரி எக்ஸ்பிரஸில் இங்கிருந்து புறப்பட வேண்டும்" என்றான்.

"அதற்குள்ளேயா?" என்றாள் சுசீலா தலையைக் குனிந்து கொண்டே. அவள் கைகள் நடுங்கியதால் தன் தகப்பனுருக்காக அவள் ஆற்றிக் கொண்டிருந்த காப்பி கீழே சிந்திற்று. அதைப் பார்த்ததும் தங்கமணியின் மனம் பதைத்தது. ஆனால் சுசீலா ஏன் முகத்தை நிமிர்ந்து அவனைப் பார்க்க மாட்டேன் என்கிறாள்? "'அதற்குள்ளேயா?' என்பதைத் தவிர வேறொன்றும் அவள் வாயிலிருந்து வராதா? சரி, இன்று எப்படியாவது நாம் மதுரத்தைக் கேட்டு விட வேண்டியது தான்!" என்று அவன் மனதுக்குள் சொல்லிக் கொண்டான்.

காப்பி சாப்பிட்டபின் தங்கமணி தன் தமையன் வீட்டுக்குச் சென்றான். நாராயணய்யர் வீட்டில் இல்லை.

"மன்னி! நாளை ராத்திரி நான் புறப்படுகிறேன்." என்று ராஜம்மாளிடம் சொல்லிக் கொண்டான்.

"போவது நிச்சயமாய் விட்டதா? சரி, போய் விட்டு வா அப்பா. உடம்பை ஜாக்கிரதையாகப் பார்த்துக் கொள். எத்தனை நாள் அங்கே இருக்க வேண்டி யிருக்கும்?" என்று அவள் கேட்டாள்.

"நாலு மாசமாவது ஆகும்."

"நாலு மாசமா! அடே யப்பா! எப்படித்தான் சுசீலா அத்தனை நாள் உன்னை விட்டுப் பிரிந்து இருக்கப் போகிறாளோ?"

"அதற்கென்ன பண்ணுகிறது?"

"இனிமேல் ஆத்திலே சுசீலாவும் உங்க மாமனாரும் மதுரமும் தானே நாலு மாசத்துக்கு? மதுரமும் இங்கே தானே இருக்கப் போகிறாள்?"

"மதுரமா? அவளைக் கூட அவாள் ஊருக்கு அனுப்பிவிடலாம் என்று இருக்கிறேன்" என்றான். மனமறிந்து அவன் பொய் சொன்னது அதுவே முதல் தடவை.

உடனே ராஜம்மாள் மலர்ந்த முகத்துடன் "ஆமாம் அப்பா, அதுதான் சரி. அனுப்பிவிடுவதே நல்லது. நமக்கு வேறே சமையலுக்கு ஆள் அகப்படாதா என்ன? அதுவும் சிறிசு; உலகமே தெரியாதது. கடைசியில் நமக்குத்தான் கெட்ட பெயர்" என்றாள். பின்பு, "சுசீலாவை நினைத்தால்தான் எனக்குக் கவலையாய் இருக்கிறது. உன்னைப் பிரிந்து எப்படி அவள் இருக்கப் போகிறாள்? எப்போதும் இருந்த தில்லையே! நாலு மாசம் என்று ஆபீஸில் சொன்னாலும் நீ சீக்கிரமாகவே வந்து விடு. சுசீலா ரொம்ப பலஹீனமாய் இருக்கிறாள். இந்த சமயத்தில் அவளைத் தனியாய் விட்டுவிட்டு நீ போகவே கூடாது. அத்துடன் மூன்று மாசமாய் அவள் ஸ்நானம் வேறு பண்ணவில்லையாம்?—" என்று சொல்லிக் கொண்டே போனாள்.

அதற்குமேல் அவள் சொன்னது ஒன்றும் தங்கமணியின் காதில் விழவில்லை. அவள் கடைசியாகக் கூறினாளே அது என்ன? ஒன்றும் புரியவில்லையே! திக்கு திக்கென்று அடித்துக்கொள்ளும் நெஞ்சுடன், நிற்க முடியாமல் அப்படியே பக்கத்தில் இருந்த நாற்காலியில் உட்கார்ந்தான். இரண்டு நிமிஷம் கழித்து, சமாளித்துக் கொண்டு "மூன்று மாசமா ஆகிறது?" என்று கேட்டான்.

"ஆமாம், அதான் பாவம் பல்லைக் கடித்துக்கொண்டு அவள் பேசாமல் இருக்கிறாள். இல்லாவிட்டால், நானும் கூட வருகிறேன் என்று குதிக்க மாட்டாளா? எப்படித்தான் நாலு மாசத்தைக் கழிக்கப் போகிறாளோ!"

"நீங்களெல்லாம் இல்லையா மன்னி; பார்த்துக்கொள்ள மாட்டீர்களா?"

"யார் இருந்தாலும் உன்னைப் போல் அவளுக்கு ஆகுமா அப்பா?"

வீட்டை நோக்கிச் செல்லும்பொழுது தங்கமணி ராஜம்மாளை மனமார வாழ்த்தினான். அவன் மனதிலிருந்த கொந்தளிப்பெல்லாம் அடங்கி ஒரு தெய்வீகமான அமைதி குடிகொண்டது. எப்பேர்ப்பட்ட சமயத்தில் மன்னி ஒரு வார்த்தை சொன்னாள்! அவள் சொல்லாமல் இருந்திருந்தால் நாம் என்ன காரியம் செய்திருப்போம்? அப்புறம் நம் கதி என்ன? சுசீலாவின் கதி என்ன? — இப்படி எண்ணி, தன்னைப்

பெரிய விபத்திலிருந்து காப்பாற்றியதற்காகக் கடவுளை வாழ்த்தினான்.

நினைக்க நினைக்க அவனுக்குச் சந்தோஷம் தாங்கவில்லை. இதெல்லாம் உண்மைதானா? சுசீலாவுக்குக் குழந்தை பிறக்கப் போகிறது! நமக்குக் குழந்தை பிறக்கப் போகிறது! — தெருவிலே இதை இரைந்து கத்தலாமா என்று கூட அவனுக்குத் தோன்றிற்று.

தன் பங்களாவின் கேட்டைத் திறந்துகொண்டு உள்ளே சென்றதும், வாயிற்படியில் காலை வைப்பதற்குள் தங்கமணி "சுசீலா! சுசீலா!" என்று கூப்பிட்டுக்கொண்டே ஓடினான். சுசீலாவைக் கீழே காணவில்லை. மாடியறையில் இருந்தாளாதலால் மாடிப் படிகளில் தடதட என்று ஏறினான். தன் பெயரைக் கூப்பிட்டுக் கொண்டு அவன் அறைக்குள் நுழைந்த போது அவள் ஜன்னல் எதிரில் நின்று தோட்டத்தை நோக்கிக் கொண்டிருந்தாள். கணவனுடைய குரலைக் கேட்டதும் திரும்பிப் பார்த்தாள். "சுசீலா!" என்று மறுபடி கூப்பிட்டுக் கொண்டு அவன் அருகில் சென்று அவள் அவள் கைகளைப் பிடித்த வண்ணம், "ஏன் சுசீலா என்னோடு பேசவே மாட்டேன் என்கிறாய்?" என்றான். அப்பொழுது அவன் குரல் கம்மிப் போயிருந்தது.

கண்ணைக் கொட்டாமல் அவள் அவனைப் பார்த்துக் கொண்டு நின்றாள். திடீரென்று கண்களிலிருந்து பலபல என்று நீர் பெருக ஆரம்பித்தது. "நீங்கள்தான் என்னோடு பேசுவதே இல்லை" என்ற வார்த்தைகள் அழுகையுடன் கலந்து வெளிப் பட்டன.

"அடி பைத்தியமே! உனக்குத்தான் என்மேல் என்னமோ கோபமாக்கும் என்றல்லவா நினைத்துக் கொண்டிருந்தேன்! அதைப் பற்றி நினைக்க நினைக்க எனக்குப் பொறுக்க முடியாமல் போய் விட்டது" என்றான்.

"அப்படி என்றால் என்னோடே பேசுகிறதுதானே? நீங்கள்தான் கோபித்துக் கொண்டிருக்கிறீர்களாக்கும் என்றல்லவா நான் நினைத்தேன்?" என்றாள் அழுது கொண்டே.

"நன்றாய் நினைத்தாய்! பைத்தியம் தான் இரண்டு பேருக்கும். இத்தனையும் ஒரு காரணமும் இல்லாமல்! —" என்று அவளை இறுகத் தழுவிக் கொண்டான்.

இருவரும் கட்டிலின் மேல் உட்கார்ந்தார்கள். "அதிருக்கட்டும் சுசீலா; அன்று ஆத்துக்குப் போயிருந்தேன். மன்னி சொன்னாள் மூன்று மாசமாக நீ ஸ்நானம் பண்ணவில்லை என்று. என்னிடம் நீ ஏன் சொல்லவில்லை" என்று கேட்டான்.

அவள் முகத்தில் வெட்கத்துடன் கூடிய புன்னகை தவழ்ந்தது. "உங்களுக்குத் தெரியாதா என்ன?"

"நீ சொல்லவே இல்லையே!"

"அவ்வளவுதான் உங்களுக்குத் தெரிந்த லக்ஷணம்! நீங்கள் எப்படித் தான் அவ்வளவு தூர தேசத்துக்குப் போய் சமாளித்துக் கொள்ளப் போகிறீர்களோ?"

"போய்விட்டு ஒரு மாசத்துக்கெல்லாம் வந்து விடுகிறேன், பார். என்னாலே நாலு மாசம் உன்னை விட்டு இருக்க முடியாது" என்றான் தங்கமணி.

* * *

வெள்ளிக்கிழமை இரவு அவன் புறப்படும் பொழுது எல்லோரும் வாசலில் வந்து நின்றார்கள். அவர்களிடம் சொல்லிக் கொண்டு கடைசியில் தங்கமணி மதுரத்தைப் பார்த்து, "போய் விட்டு வரட்டுமா மதுரம்?" என்றான்.

மதுரம் பேசாமல் தலையை அசைத்தாள்.

"சுசீலாவை ஜாக்கிரதையாய்ப் பார்த்துக்கோ அம்மா. உன்னை நம்பித்தான் அவளை விட்டுவிட்டுப் போகிறேன். நான் திரும்பி வந்ததும் நீதான் பத்திரமாய் அவளை என்னிடம் ஒப்புவிக்க வேண்டும், தெரியுமா?" என்றதும் மதுரம் புன்னகை செய்தாள்.

முற்றிற்று





# காலக்ஷேபம்

### அவர் சொன்னதுதான்!

உபாத்தியாயர்:—ராமு! ஏன், எதைக் கேட்டாலும் பதில் சொல்லத் தெரியாமல் இப்படி மரம் மாதிரி நிற்கிறாய்?

ராமு:—நீங்கள்தானே ஸார், சொன்னீர்கள்: "எல்லாம் தெரிந்தவர்கள் எதையுமே தங்களுக்குத் தெரிந்ததாகக் காட்டிக் கொள்ள மாட்டார்கள்!" என்று.

—வி. நடராஜன்.

●

### எப்படித் தெரியும்?

முதலாளி:—ஏனப்பா டிரைவர்! இது என்ன டயரில் இவ்வளவு பெரிய கிழிசல்!

டிரைவர்:—ஒரு கண்ணாடி டம்ளர் மேலே வண்டி ஏறிடிச்சுங்க.

முதலாளி:—ஏன்! எதிரே கண்ணாடி டம்ளர் கிடந்தது உன் கண்ணில் படவில்லையோ?

டிரைவர்:—டம்ளர் கண்ணுக்குத் தெரிஞ்சிருந்தா வேணும்னு ஏத்து வேனுங்களா! அந்த பாளாப் போனவன் அதைச் சட்டைப் பைக்குள்ளே வச்சிருந்தான். அந்த எளவு எனக்குத் தெரியாமல் போச்சுங்களே!

—ஏ. கே. பட்டுசாமி.

●

### என்ன தப்பு

வீட்டுக்காரர் டெலிபோன் கம்பெனிக்கு அநேக கடிதங்கள் எழுதிப் பார்த்துக் கடைசியில் நேரில் சென்று "டெலிபோன் சரியாக வேலை செய்யவில்லை. கெட்டுப் போயிருக்கிறது" என்று புகார் செய்தார்.

கம்பெனிக்காரர்:—கோபித்துக் கொள்ள வேண்டாம்; தங்களுடைய கடிதம் கிடைத்த பொழுதெல்லாம் டெலிபோனில் தங்களைக் கூப்பிட்டுக் கோளாறு என்னவென்று விசாரித்தோம். ஒருவராவது பதில் சொல்லவில்லை.

—கே. வி. சீனு.

### சம்பாத்தியம்!

ஒருவன்:—நான் குழந்தையாயிருக்கும்பொழுதே சம்பாதிக்கத் தொடங்கிவிட்டேன்!

மற்றவன்:—எப்படி?

முதல்வன்:—குழந்தைகள் கண்காட்சியில், நான் மிகவும் கொழுத்துப் போயிருந்ததற்காக என் மூன்றுவது வயதில் முதல் பரிசு 200 ரூபாய் கொடுத்தார்களாம்!

—து. இராமசாமி.

●

### தெரியாத விஷயம்!

கண் வைத்தியர்:—எதிர்த்த சுவரிலிருக்கும் எழுத்துக்களைப் படியுங்கள்.

நோயாளி:—முடியவில்லை.

கண் வைத்தியர்:—சற்று சமீபத்தில் சென்று பாரும்.

நோயாளி:—முடியவில்லையே!

கண் வைத்தியர்:—இப்பொழுதுமா முடியவில்லை?

நோயாளி:—ஆம், எனக்குப் படிக்கத் தெரியாது!

—எஸ். சங்கர சுப்ரமணியன்.

●

### உண்மைதான்!

சாப்பிடுபவர் (ஹோட்டல் முதலாளியைப் பார்த்து):—ஏன் ஐயா! உம்முடைய ஹோட்டல் பக்ஷணங்கள் நேற்றைய பக்ஷணங்களைவிட மோசமாயிருக்கின்றனவே!



ஓட்டல்காரர்:—அப்படிச் சொ… னீர்கள்! இவை நேற்றைய … கள்தான்! —மு. நாக…



# பாப்பா மலர்



## கரடியின் மறதி!

[ வி. ஜி ]

அப்பொழுது மழைகாலம். எங்கே பார்த்தாலும் மழைக்காக அணிந்து கொள்ளும் ரப்பர் கோட்டுகளும் குடைகளும் காணமற் போய்க் கொண்டிருந்தன. அவற்றைக் கண்டு பிடிப்பதற்காகக் காட்டிலிருந்த போலீஸார் எடுத்துக் கொண்ட முயற்சிகளெல்லாம் வீணாயின. எனவே, கடைசியில் அவர்கள், "காட்டில் உள்ள மிருகங்கள் யாவும் தங்கள் பெயர்களை அவரவர்கள் கோட்டுகளிலும் குடைகளிலும் அழியாத எழுத்தில் எழுதி வைக்க வேண்டும்" என்று உத்தரவு போட்டனர்.

ஒரு நாள் கரடியார் தம்முடைய கோட்டையும் குடையையும் ஆபீஸிலேயே மறந்து வைத்து விட்டு வந்து விட்டார். மறுநாள் போய்ப் பார்த்த போது அவர் வைத்துவிட்டு வந்த இடத்தில் கோட்டையும் குடையையும் காணவில்லை. மூலைமுடுக்குகளி லெல்லாம் தேடிப் பார்த்தார். கிடைக்கவில்லை. விளையாட்டுக்காக யாராவது எடுத்து ஒளித்து வைத்திருக்கிறார்களோ என்னமோ என்று ஆபீஸில் உள்ளவர்களையெல்லாம் விசாரித்துப் பார்த்தார். எல்லோரும் ஒரே யடியாக, "நாங்கள் யாரும் பார்க்கவில்லை" என்று சொல்லி விட்டார்கள்.

"ஒருவரும் பார்க்கவில்லையென்றால் பின் எப்படித்தான் கோட்டும் குடையும் போயிருக்கும்? நான் போலீஸிற்குச் சென்று புகார் செய்யப் போகிறேன்" என்று பயமுறுத்தினார்.



அதற்கெல்லாம் யாரும் அசைந்து கொடுக்கவில்லை. எனவே, கரடியார் போலிஸ் ஸ்டேஷனுக்குச் சென்று புகார் செய்தார். ஸப்-இன்ஸ்பெக்டர் காண்டாமிருகம் கரடியாரைப் பார்த்து, "அவற்றில் உம்முடைய பெயரை எழுதி வைத்திருக்கிறீரா?" என்று கேட்டார்.

"எழுதி வைத்திருக்கிறேன்" என்றார் கரடியார்.

"சரி, அப்படியானால் ஒரு வேளை கிடைத்தாலும் கிடைக்கலாம். இப்பொழுது நீர் போய் வாரும். கிடைத்தால் கூப்பிடுகிறோம்" என்று சொல்லிக் கரடியாரை மிஸ்டர் காண்டாமிருகம் அனுப்பி விட்டார்.

கரடியார் முகத்தைத் தொங்க விட்டுக் கொண்டு வீடு திரும்பினார். வழியில், கங்காரு தன் குட்டியுடன் குடையைப் பிடித்துக்கொண்டு வந்ததைப் பார்த்தபோது, அவர் தமது குடையை நினைத்துக்கொண்டு வருந்தினார். அந்த வருத்தத்தில், ஒட்டைச்

சிவிங்கியாரின் கழுத்தைக் கட்டிக் கொண்டு குரங்கார் குடை பிடித்துக் கொண்டு வந்ததைப் பார்த்தபோது கூட அவருக்குச் சிரிப்பு வரவில்லை.

கரடியார் தமது வீட்டை நெருங்கிய போது அவருடைய மனைவி வீணை வாசித்துக் கொண்டிருந்தாள். அதைக் கேட்ட கரடியார் விஷயம் தெரியாமல், "அங்கே யார்? அந்தப் பூனை ஏன் அப்படி அழுது வடிந்து கொண்டிருக்கிறது? அதை அடித்து விரட்டு!" என்று சொல்லிக் கொண்டே வீட்டுக்குள் நுழைந்தார்.

"ஆமாம், நான் வீணை வாசித்தால் உங்களுக்குப் பூனை அழுவதுபோல் தான் இருக்கும்!" என்று சொல்லிக் கரடியாரின் மனைவி கோபித்துக் கொண்டாள்.

"நீயா வீணை வாசித்தாய்? அடாடா! எனக்குத் தெரியாதே!" என்று சொல்



லிக் கரடியார் தமது மனைவியைச் சமாதானம் செய்தார்.

மறுநாள் காலை ஆபீஸிற்குப் போகும்போது, கரடியார் நேரே போலீஸ் ஸ்டேஷனுக்குச் சென்றார். காணமற் போன குடைகளும் கோட்டுகளும் வந்து குவிந்திருந்தன. அவற்றை ஸப் - இன்ஸ்பெக்டர் காண்டா மிருகம் பார்வையிட்டுக் கொண்டிருந்தார். அதைப் பார்த்த கரடியார், "என்னுடைய கோட்டும் குடையும் கிடைத்ததா, ஸார்?" என்று சோக ரஸத்துடன் கேட்டார்.

"உம்முடையதா? அதுதான் தெரியவில்லை. நேற்று உமது பெயரைக் குறித்து வைத்த காகிதத் துண்டை எங்கேயோ தொலைத்து விட்டேன். உம்முடைய பெயர் என்ன?" என்று ஸப் - இன்ஸ்பெக்டர் விசாரித்தார்.



"கரடி!"

"அது தெரியாதா எனக்கு? நான் கேட்பது உம்முடைய நாமதேயம்!"

"அப்படி என்றால்?"

"நீர் என்ன என்று கையெழுத்துப் போடுவீர்?"

"லக்கி என்று!"

"கோட்டிலும் குடையிலும் என்ன வென்று எழுதி வைத்தீர்?"

"'கரடி' என்று!"

"உம்முடைய மூளையே மூளை! காட்டில் நீர் ஒரு கரடியார்தானா இருக்கிறீர்? உம்முடைய கோட்டையும் குடையையும் எந்தக் கரடியார் எடுத்துக் கொண்டு போனாரோ? போய் வாரும்" என்று சொல்லிக் காண்டா மிருகம் கேலியாகச் சிரித்தது.

அதைக் கேட்டதும் கரடியாரின் முகத்தில் அசடு வழிந்தது. அவர் தம்முடைய ஞாபக மறதியை நினைத்து மிகவும் வருந்தினார்.



# ஜப்பானுக்கு வெடிகுண்டு

பல் வேறுவகையான ஆயுதங்கள் அடிபடும் யுத்தம் இது. பீரங்கிகள், டாங்கிகள், ஆகாய விமானங்கள், கப்பல்கள் முதலியவை தற்காப்புக்குரிய ஆயுதங்களென்பது தெரிந்தவிஷயம். ஆனால் நம்பிக்கை, மனோ உறுதி, சிக்கனவாழ்வு ஆகிய ஆயுதங்களைப்பற்றி நாம் அவ்வளவுதூரம் தெரிந்துகொள்ள வில்லையாயினும் அவைகளும் முக்கியமானவை.

டிரக்குகள், ரேடியோ, துணிமணி, நிலக்கரி, உருக்கு, சாயம், சோப்பு, பற்பசை முதலிய சகல சாமான்களும் இந்தியாவை பாதுகாப்பதற்காக படைகளுக்கு வேண்டியிருக்கிறது. இதனில் நாமே நமது தற்காப்புடன் போட்டி போடவேண்டாம். நமக்கு இப்பொழுது இன்றியமையாதது வெற்றிதான். அது கிட்டாமல் போய்விடக்கூடாது. அதற்காக நாம் இவை ஒன்றுமே இல்லாமல் வேண்டுமானாலும் கழித்து விடுவோம்.

அதுதான் சர்வவியாபக யுத்தம். இதை நமது சத்துருக்கள் நன்கறிந்து கொண்டிருக்கின்றனர். ஆனால் நாம் இதைக் கொஞ்சமும் தெரிந்துகொள்ளவில்லை. நாமும் சம்பூரண முயற்சியுடன் எதிர்க்கிறோமென்பதை அந்த ஜப்பானியர் உணரச்செய்யுங்கள். நமது உழைப்பையும் பணத்தையும் இம் முயற்சியில் ஒன்று சேர்த்து விடுவோமானால் ஜப்பானின் மார்பில் போய் தாக்கும்படி வெடிகுண்டு வீசியதுபோலாகும்.

**டிபென்ஸ் ஸேவிங்ஸ் ஸர்ட்டிபிகேட்டுகள்**

...அல்லது டிபென்ஸ் லோன்களைத் தவிர

வேறெதையும் வாங்குமுன்—சற்றே யோசியுங்கள்



ஸர்ட்டிபிகேட்டுகள் உங்கள் தபாலாபீஸில் கிடைக்கும் ரூ. 10-க்கு பத்துவருடத்தில் ரூ. 3/9 லாபம் கிடைக்கிறது.

C. P. U. 27 TM.

# தமிழ் வளர்ந்த கதை

பி.ஸ்ரீ.

## 9. தமிழர் தெய்வம்

மலைகளும் காடுகளும் நமது வாழ்விற்கு எவ்வளவு அவசியமானவை என்பதை நாம் நினைத்துப் பார்ப்பதில்லை. ''அங்கே பழைய காலத்தில் ராஜாக்களும், இந்தக் காலத்தில் துரைமார்களும் வேட்டையாடுவதுண்டு'' என்றுதான் பலரும் நினைக்கிறார்கள். ''பழைய காலத்தில் அங்கே முனிவர்கள் தவஞ் செய்தார்கள்; இக் காலத்திலே காட்டிலாகா அதிகாரிகள் அதிகாரம் செய்கிறார்கள்'' என்றும் சொல்லுவார்கள். காடுகளிலிருந்து கிடைக்கும் எத்தனையோ பொருள்களை நாடுகள் உபயோகித்து வருகின்றன. அந்தப் பொருள்களை நம் முன்னோர்கள் ''காடுபடு திரவியம்'' என்றும், ''மலைபடு திரவியம்'' என்றும் பாராட்டினார்கள்.

### காட்டுக்கும் வீட்டுக்கும் தெய்வம்

நாடுகளின் வாழ்விற்குக் காடுகள் அவசியமானவை என்பதை மட்டுமா அவர்கள் உணர்ந்திருந்தார்கள்? நம் முன்னோர்களில் ஒரு பகுதியினரான ஜனங்கள் மலைகளிலும் மலையடிவாரங்களிலும் வாழ்ந்து வந்தார்கள்; மற்றொரு பகுதியினர் காடுகளில் வசித்தார்கள். மலை நிலத்தை அவர்கள் குறிஞ்சி நிலம் என்று குறிப்பிட்டார்கள்; காடுகளையும் காடு சார்ந்த இடங்களையும் முல்லை நிலம் என்றார்கள். மலைகளும் காடுகளும் தமிழ் நாகரிகத்தின் பழைய வளர்ப்புப் பண்ணைகளாயிருந்தன.

ஜனத்தொகை அதிகரித்ததும் மனிதர்கள் காடுகளை அழித்து அழித்து நாடாக்குவது வழக்கம். அகஸ்தியர் காலத்திலேயே தமிழ் – இந்தியாவில் இந்த முயற்சி ஆரம்பமாகி விட்டதென்கிறார்கள். உரையாசிரியரான நச்சினார்க்கினியர் தொல்காப்பியப் பாயிர உரையில் எழுதுவது :—'' அவரும் (அகஸ்தியரும்) தென் திசைக் கண் போதுகின்றவர் ... துவராபதி (துவாரகாபுரி)ப் போந்து நிலம்கடந்த நெடுமுடி அண்ணல் (கிருஷ்ண பகவான்) வழிக்கண் அரசர் பதின் எண் மரையும், பதினெண்குடி வேளிர் உள்ளிட்டாரையும், அருவாளரையும் கொண்டு போந்து காடு கெடுத்து நாடாக்கி ... பொதியிலின் கண் (பொதிய மலையில்) இருந்தனர்.''

கிருஷ்ணன் அவதரித்த யாதவ குலத்தினர் முதலானவர்களை அகஸ்தியர் தென்னாட்டுக் காடுகளிலே குடியேற்றினார் என்பது நச்சினார்க்கினியார் அபிப்பிராயம். காடுகளில் வசித்தவர்கள் யாதவர்களும் ஆயர்களுமான ஜனங்கள்: அவர்கள் மாயவனாகிய கண்ணனை ஆதி தெய்வமாக வழிபட்டு வந்தார்கள் —என்கிறார் தொல்காப்பியர்.

மாயோன் மேய
காடுறை உலகமும்

[மேய : மேவிய.]

என்று அவர் கூறுவதிலிருந்து, கிருஷ்ண பக்தி அந்தப் பழைய காலத்திலேயே தமிழ் நாட்டிலும் பரவி விட்ட தென்று தெரிகிறது. ''காட்டுக்கொரு தெய்வம்; வீட்டுக்கு ஒரு தெய்வமா?'' என்பது ஒரு பழமொழி. கண்ணன் காட்டுக்கும் வீட்டுக்கும் ஒரு தெய்வமானான். பின்னளில் கிருஷ்ண பக்தி வைஷ்ணவமாகத் தழைத்திருக்க வேண்டும். இதனாலும் வட இந்தியாவும் தென் இந்தியாவும் ஐக்கியம் அடைந்தது இன்று நேற்றல்ல என்று தெரிகிறதல்லவா?

காடுகளிலும் காடு சார்ந்த நிலங்களிலும் வாழ்ந்த மக்கள் அந்த வளங்களையும் வனப்புகளையும் அனுபவித்து அனுபவித்து. அந்த நில நீர் வளங்களுக்கெல்லாம்— அந்தச் செழிப்பிற்கெல்லாம் — அந்த அழகிற்கெல்லாம்— கண்ணபிரானை ஆதி தெய்வமாகப் போற்றிப் பக்தி பண்ணிக் கொண்டிருந்தார்கள். அவர்கள் கண்ணன் என்ற அழகுத் தெய்வத்தை வழிபட்டார்கள் என்றால், மலை நிலங்களில் வசித்த தமிழர்கள் முருகன் என்ற அழகுத் தெய்வத்தை வழிபட்டார்கள்.

சேயோன் மேய
மைவரை உலகமும்

[சேயோன் : செந்நிறமுள்ள முருகக் கடவுள், வரை : மலை.]

என்பர் தொல்காப்பியர். "சேயோன்" என்பதற்குப் பின்னாளில் "சிவபெருமான்" என்ற பொருளும் ஏற்பட்டது. கண்ணன் வழிபாடு வைஷ்ணவமாக வளர்ந்ததுபோல், முருகன் வழிபாடு சைவசமயமாக வளர்ந்திருக்க வேண்டும். வைஷ்ணவத்தைப் போல் சைவமும் இமயமலை முதல் கன்னியா குமாரி வரையில் காணப்படுவதால், இதுவும் இந்தியாவின் ஒருமைக்கு ஒரு சாட்சிதான். கண்ணன் காட்டுத் தெய்வமா யிருந்து நாட்டுத் தெய்வமானது போல், முருகனும் மலைத் தெய்வமா யிருந்து நாட்டுத் தெய்வமாகி விட்டான்!

காடு கெடுத்து நாடாக்கும் முயற்சி அகஸ்தியர் — தொல்காப்பியர் காலத்திற்கு முன்பே நடை பெற்றிருக்க வேண்டும். அந்த முயற்சி அதிகரிக்க அதிகரிக்கத் தமிழர்கள் உள் நாட்டிலே நதி ஓரங்கள் முதலான நீர்ப்பாங்கான இடங்களில் விவசாயம் செய்து கொண்டு வசதியாக வாழத் தொடங்கினார்கள். மலை நிலத்தைக் குறிஞ்சி யென்றும், காடுகளை முல்லை நிலமென்றும் சொன்னவர்கள், வயல்களும் வயல்கள் சூழ்ந்த இடமுமான நாட்டை மருத நிலம் என்றார்கள். காட்டில் வாழ்ந்த தமிழர்கள் மழைக் கடவுளாகிய இந்திரனை வழி பட்டார்கள் — என்கிறார் தொல்காப்பியர்:

வேந்தன் மேய
தீம்புனல் உலகமும்.

[வேந்தன் = அரசன்; (இங்கே) தேவ ராஜாவாகிய தேவேந்திரன்; தீம்புனல் = இனிய நீர்.]

கடலோரங்களிலே வசித்த தமிழர்களும் உண்டு. இந்த நிலத்தை நெய்தல் நிலம் என்றார்கள். இந்த மணல் பிரதேசங்களில் வாழ்ந்தவர்கள்,

வருணன் மேய
பெருமணல் உலகமும்

என்று தொல்காப்பியர் சொல்லுகிற படி, வருணனை (ஜலக் கடவுள் அல்லது சமுத்திர ராஜாவை) வழி பட்டார்கள். இந்திரனும் வருணனும் வேதத்தில் குறிக்கப்படும் தெய்வங்கள்: எனவே, வட நாட்டாரின் வைதிக வழிபாடு தொல்காப்பியர் காலத்திற்கும் முன்பே தமிழகத்தில் பரவி வழங்கி வந்த தென்று நிச்சயிக்கலாம். நாளடைவில் இந்திரன் — வருணன் வழிபாடுகள் மறைந்து போய்ச் சைவ வைஷ்ணவ வழிபாடுகள் நாடெங்கும் பரவி விட்டன.

## இயற்கையும் தெய்வ வழிபாடும்

மலை, காடு, நாடு, கடற்கரை — அதாவது, குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் — என்று நிலத்தை நம் முன்னோர் நாலு இயற்கைப் பிரிவுகளாகப் பிரித்திருந்தார்கள்: எனவே பூமிக்கு நானிலம் என்றும் ஒரு பெயர். இந்த நானிலத்தையும் அந்த அந்த நிலத்திற்கு உரிய தெய்வத்தோடு குறிப்பிடுகிறார் தொல்காப்பியர். உரையாசிரியர்கள், அந்த நிலங்களுக்கு உரிய உணவுகள், மிருகங்கள், பறவைகள், மரங்கள், தொழில்கள், பொழுது போக்குகள் முதலியவற்றையும் குறிப்பிடுகிறார்கள்.

பின்னால் வந்தவர்கள், நானிலத்தோடு பாலை நிலத்தையும் சேர்த்து ஐந்து நிலமாகக் குறிப்பிடுகிறார்கள். மலை நிலத்திலும் காடுகளிலும் வளமில்லாமல் வறண்டு போன பகுதிகள் பாலைவனமாகி விட்டன. பாலைவனவாசிகள் காளி (தேவி)யையும் சூரியனையும் தெய்வமாக வழிபட்டார்களாம், அந்த

நிலத்தின் தன்மைக்குப் பொருத்த மானபடி.

ஆதிகாலத்தில் சூரியன், மழை முதலான இயற்கைப் பொருள்களை வணங்கி வந்த மக்கள் நாளடைவில் அந்த அந்தப் பொருள்களின் அதிதேவதையைக் கண்டு பிடித்து வழி பட்டிருக்க வேண்டும். உதாரணமாக,

மாமழை போற்றுதும்;
மாமழை போற்றுதும்!

என்று விவசாயத்திற்கு மழை வேண்டி மழைப் பாடல்கள் பாடி மழை — மந்திரங்கள் ஜபித்துக் கொண்டிருந்தவர்கள், நாளடைவில் மழையை அடக்கியாளும் [illegible]சனைத் தேவேந்திரனைப் போற்றினார்கள். அப்பால் தேவாதி தேவனாக முருகன், கண்ணன், சிவன் முதலான தெய்வங்களை வழி பட்டார்கள். இப்படி இயற்கை — வழிபாட்டிலிருந்து தெய்வ வழிபாடு தோன்றிய முறையும், வடநாட்டிற்கும் தமிழ்நாட்டிற்கும் பொதுவானதுதான். இந்த முறையை இந்து வேதங்களை ஆராயும் அறிஞர்கள் நன்கு அறிந்திருக்கிறார்கள்.

"வேத நெறி" என்ற வைதிக மதம் தொல்காப்பியர் காலத்திற்கு முன்பே தமிழர் கொள்கையாகவும் இருந்தது.

மறைமொழி தானே
மந்திரம் என்ப

[மறை: வேதம்; என்ப: என்று பெரியோர் சொல்லுகிறார்கள்.]

என்று தொல்காப்பியரே சொல்லுகிறார். எனினும் தொல்காப்பியரை அவைதிகர் என்றும், ஜைனர் என்றும் வாதிப்பவர்கள் உண்டு. தொல்காப்பியர் ஜைனர்தான் என்று ருஜுவாகி விட்டால்தான் என்ன? அதுவும், வடநாடு தென்னாடுகளின் ஒற்றுமையைத் தானே ருஜுப் படுத்தப் போகிறது! அவைதிகமான ஜைனமும் வைதிக இந்து மதத்தின் குழந்தையாகத் தோன்றி 'ஸ்வராஜ்யம்' பெற்றதுதானே?

வட இந்தியாவிலும் தமிழ்—இந்தியாவிலும் மலைகளும் காடுகளும் மத உணர்ச்சியை விசேஷமாக உருவாக்கின. நமது வாழ்விற்கும் அவை துணையாக இருந்தன. அன்று மட்டுமா? திருப்பதி காளஹஸ்தி பழனி முதலான மலைக் கோயில்களையும், ஒரு காலத்தில் காடுகளாயிருந்த சிதம்பரம் ஸ்ரீரங்கம் முதலான ஸ்தலங்களையும் கேட்டுப் பாருங்கள்.

# வட்ட மேஜை

**1** திருப்பதி
11—7—43

ஜுலை 10-ந் தேதி இதழில் வெளியான 'தமிழ் மக'னின் 'எத்தனை அடி வேண்டும்!' என்ற கட்டுரையை நான் முழுதும் ஆதரிக்கிறேன்.

நான் தெலுங்கு தேசத்திலிருக்கும் ஒரு தமிழன். இங்கிருக்கும் ஜனங்கள் தமிழ்ப் படத்தைப் பற்றியும் தமிழர்களைப் பற்றியும் என்ன அபிப்பிராயத்தைக் கொண்டிருக்கிறு' என்பது எனக்குத் தெரியும்.

எல்லாக் கலைகளிலும் தமிழ் மக்கள் முன்னுக்கு வந்திருக்கிறார்கள். ஆனால் சினிமாக் கலையைப் பற்றி அப்படிச் சொல்வதற்கில்லை. நேற்றைய தினம் நான் இங்கு ஒரு பிரபல தெலுங்கு டைரக்டரோடு பேசிக் கொண்டிருந்தேன். அவரும் இந்த அபிப்பிராயத்தையே தெரிவித்தார். எனக்குக் கொஞ்சம் கஷ்டமாய்த்தா னிருந்தது.

"மட்டக் காட்சிகள் தமிழ் மக்களுக்கு அவசியமா என்று நான் கேட்கிறேன். இப்படிப்பட்ட காட்சிகளைச் சேர்த்தாவது தமிழ் டாக்கித் தொழில் வெற்றி யடைய வேண்டுமா? அதைக் காட்டிலும் அந்தத் தொழில் குட்டிச் சுவராய்ப் போவதே மேலல்லவா?" என்று எழுதியதை நானும் ஆதரிக்கிறேன்.

தமிழர்கள் தாமாகவே நல்ல படம் எடுக்க முன் வராவிட்டாலும், கவர்ன்மெண்டாவது நீளத்தைக் குறைக்க முன் வந்ததற்கு நான் கடவுளுக்கு வந்தனம் செலுத்துகிறேன்.

என். வரதாச்சாரி.

**2** சேலம்
11—7—43

சென்ற இதழ்களில் தாங்கள் வெளியிட்டிருக்கும் "தமிழ்ப் படங்கள் 11,000 அடி தான் இருக்க வேண்டும்" என்ற கட்டுரைகள், மகா ரஸிகர்களான எல்லாத் தமிழ் மக்களாலும் நன்கு வரவேற்கப்பட்டது என்பதில் சிறிதும் ஐயமில்லை. தமிழ் மக்கள் 20,000 அடி உள்ள தமிழ்ப் படங்களை விட, 11,000 அடி உள்ள ஹிந்திப் படங்களையே ஆர்வத்துடன் வரவேற்கிறார்கள். ஆபாசக் குப்பைகளான விபசார ஹாஸ்யங்களையும், கள்ளுப் பாடல்களையும், வேஷ்டிக்குள் எலி புகுந்து கொள்ளுதல் போன்றவைகளையும் சிறந்த ஹாஸ்யங்களென்று தமிழர் கருதவில்லை. உயர்தரக் கருத்துக்கள் அடங்கிய ஹிந்திப் படங்களை வரவேற்கும் அன்பர்கள், அவைகளைப் போன்ற தமிழ்ப் படங்களை வரவேற்பார்கள் என்பதில் சந்தேகமில்லை. தமிழர் அனைவரும் தமிழ்ப் படங்கள் 11,000 அடிக்குள் எடுக்கப்படுவதை ஆர்வத்துடன் வரவேற்கிறார்கள்.

என்னுடன் என் நண்பர்கள் எல்லோரும் தங்கள் கட்சியை ஆதரிக்கிறார்கள்.

ஜி. பி. ஸ்ரீகண்டன்.

**3** கோயமுத்தூர்
12—7—43

10-7-43-ல் வெளிவந்த கல்கி பத்திரிகையில் பல சினிமா அன்பர்கள் "அதிக நீளம் அவசியமா?" என்பதைப்பற்றி எழுதியிருந்தார்கள். 14,000 அடி வேண்டும் என்று விவாதிக்கும் பத்திரிகைக்குச் சரியான பதில் கல்கி இதழில் வந்துள்ளது. சினிமா அன்பர்களின் ஏகமனதான அபிப்பிராயம் 11,000 அடி போதுமானது என்பதுதான். இதேதான் எனது விருப்பமும்.

வி. திருமலைசாமி.

**4** கல்வி அபிவிருத்திச் சங்கம், தக்கலை
13—7—43

ஜுலைமீ 10உ "கல்கி" இதழில் வெளியான "தமிழ் மகனி"ன் "எத்தனை அடி வேண்டும்" என்ற இரண்டாவது கட்டுரையையும் பார்க்க அதிர்ஷ்டம் பெற்றவர்களில் நாங்களும் சேர்ந்தவர்களென்பதை மகிழ்ச்சியுடன் தெரியப்படுத்திக் கொள்கிறோம். தமிழிலே பதினோராயிரம் அடியில், உணர்ச்சியுள்ள படங்கள் எடுக்க முடியாதென்று, மூவாயிரம் அடி கூடுதலாக வேண்டுமெனத் தப்பளாம் கொட்டும் பத்திரிகைக்குத் தக்க ஆதாரங்களுடன் பதிலிறுத்ததில் சந்தோஷிக்கிறோம்.

"பக்த நந்தனார்" டாக்கியில் அந்த ஆபாசக்காட்சியைக் காணும் எலியே தூக்குப் போட்டுக் கொள்ள நினைக்கும் என்பது சரிதான். இது போன்றவைகளைத் தமிழர்கள் ரசிப்பார்களென்று எண்ணுவது எவ்வளவு மூடத்தனம்? இம்மாதிரி ஆபாசக் காட்சிகளைத் தமிழ்ப் படத்தில் புகுத்தி தமிழ் மக்களை "மகா ரஸிக"ராக்க வேண்டாமென்று, மூவாயிரமடி கூடுதலாகக் கோரும் நண்பர்களை வேண்டுகிறோம்.

எம். கே. ஷெய்க் பரீத்.

**5** பொள்ளாச்சி
14—7—43

ஜுலை 10உ கல்கி இதழில் 'எத்தனை அடி வேண்டும், என்னும்' தலைப்பின் கீழ் தமிழ் மகன் எழுதியுள்ளதை நான் முழு மனதுடன் ஆதரிக்கிறேன். ஆபாசக் காட்சிகளுக்கு இடமில்லாமல் 11,000 அடியில் படம் ஓடுவது மிகவும் வரவேற்கத் தக்க விஷயம். தமிழ்ப் பட முதலாளிகளுக்கு 11,000 அடியில் படம் எடுத்தால் பழைய குப்பைகள் திரைக்கு வர இடமிராது என்ற சந்தேகம் போலும். 11,000 அடியில் தமிழ்ப் படம் வந்தால் தமிழ் சினிமாக் கலை முன்னேற்ற மடையும் என்பதில் ஐயமில்லை.

பி. கே. வேலுசாமி.

**6** மதுரை
13—7—43

இம்மாதம் 10உ "கல்கி"யில் "எத்தனை அடி வேண்டும்?" என்ற தலைப்பின் கீழ் "தமிழ் மகன்" எழுதியிருந்ததை மூன்று தடவை படித்தேன். இதற்கு முன்னும்

"ஆனந்த விகடன்" இவ் விஷயத்தைப் பற்றி எழுதி யிருந்ததையும் ஒப்பிட்டுப் பார்த்து விஷயத்தை நன்ருகத் திர யோசனை செய்ததில் தாங்கள் எழுதி யுள்ளதுதான் சரி என்ற முடிவுக்கு வந்திருக்கிறேன்.

"மங்கம்மா சபதம்" என்ற தமிழ் டாக்கி வரப்போவதைப்பற்றிச் சிற்சில சமயங்களில் விளம்பரமாகப் போட்டு வரும் ஆபாசப் படத்தைப் பார்த்து ஒவ்வொரு தமிழ்மகனும் தலை குனிந்துதான் ஆக வேண்டும். நான் ஒவ்வொரு வாரமும் "ஆனந்த விகடன்" வாங்கிக் கொண்டே இருந்தேன். ஆனல் "மங்கம்மா சபதம்" படத்தில் வரப் போகும் நிர்வாணப் படம் (பேருக் களவில் ஏதோ கோகலை போல் போட்டு ஆடும் அப் பெண்ணின் படத்தைப்) பார்த்ததும் என் தாயார் இனி மேல் "ஆனந்த விகடன்" ஒரு பிரதியும் வீட்டுக்கு வரக் கூடாதென்று கண்டிப்பாகச் சொல்லி விட்டார்கள். பகட்டாக விளம்பரங்கள் செய்வதும் டாம்பீகமாகப் பெரிய செலவு செய்து பட மெடுப்பதும் பெரிய காரிய மல்ல. நல்ல கதைகள் பொறுக்கி எடுத்து ஆபாச மில்லாமல் படங்கள் எடுத்தால்தான் எல்லோருக்கும் நன்மையாக இருக்கும். வெறும் குப்பைக் கதைகளையும் சிறுவர்களுக்குக் காம இச்சை உண்டு பண்ணும் படங்களையும் எடுத்தால் அவர்கள் சிறு வயதிலேயே கெட்டுச் சீரழிந்து போவதற்கு சினிமாத் தொழிலை நடத்தும் முதலாளிமார்கள்தான் ஜவாப்தாரியாவார்கள். இவர்கள் செய்யும் இவ் வக்கிரமம் எழேழு ஜன்மங்கள் எடுத்தாலும் தீராது.

ஏ. பி. வரதன்.

7

பனையப்பட்டி.
14—7—43

"எத்தனை அடி வேண்டும்" என்ற கட்டுரை இரண்டையும் நானும் எனது நண்பர்களும் படித்து மகிழ்ந்தோம்.

தமிழர் தம் சொந்தப் பத்திரிகை "கல்கி" எழுதியபடி 11 ஆயிரம் அடி போதும் என்பதே எங்கள் அபிப்பிராயம். இதை ஆதரித்து சினிமா உலகில் மிகப் பிரபலம் வாய்ந்ததும் மிகச் செல்வாக்குள்ளதுமான "பிலிம் இந்தியா" பத்திரிகை ஜூலை மாத வெளியீட்டில் மிக அழகாக எழுதி இருக்கிறது. அதற்கு ஒரு நகல் எடுத்து இத்துடன் அனுப்பி உள்ளோம்.

பனையப்பட்டி
கே. வினைதீர்த்தான் செட்டியார்.
ஏ. ராமனுதன்.
ஏ. அருணசலம்.

[தமிழ் நாட்டிலும் "பேசும் படம்", "Picturpost", "Flash", "சண்டமாருதம்" ஆகிய சினிமாப் பத்திரிகைகள் 11,000 அடிக் கட்சியைப் பலமாக ஆதரித்தே எழுதி யிருக்கின்றன. —ஆசிரியர்.]

8

பங்களூர்
14—7—43

தாங்கள் சென்ற இரண்டு பதிப்புகளில் பிரசுரித்திருக்கும் "எத்தனை அடி வேண்டும்" என்னும் கட்டுரையை ஊன்றிக் கவனித்தும் படித்தும் வருகின்றோம். இவ்வளவு நாளாக, நம் தமிழ்நாட்டைப் பற்றி இல்லாத அக்கறை உங்கள் கல்கி மலர்களைப் படிப்பதிலிருந்து எங்களுக்கு உண்டாகி யிருக்கிறது. நாங்களும் எவ்வளவோ பத்திரிகைகளைப் படித்திருக்கிறோம். ஆனல், கண்ட பலன் என்ன? (இடமிருந்து வலத்திலும், வலமிருந்து இடத்திலும்) பணத்தைத் தோற்ற பலன்தான். நம் தமிழ் மக்களிடையே, எது சரி, எது தப்பு, நாம் இப்படித்தான் செய்ய வேண்டும், இப்படிச் செய்யக் கூடாது என்று சொல்ல "கல்கி"க்குச் சொந்த மிருக்கிறது. "கல்கி" பத்திரிகையில் நேரெழுத்துப் போட்டியும், பகுத்தறிவுப் போட்டியும் போன்ற மோசடி கிடையாது. "கல்கி" பத்திரிகை அவைகளை எதிர்த்து வந்திருக்கிறது. அப்படி எதிர்ப்பதால் ஏதாவது அபாயம் நேரினும், நம் தமிழ் மக்கள் நம் தமிழ்ப் பத்திரிகையான "கல்கி"யைக் காப்பாற்றக் கடைசி வரையிலும் போராடியே தீருவார்கள்.

என். குமார்.
ஆர். ஜி. என். கோபால நாயுடு.

9

நன்னிலம்
15—7—43

உமது 10வ. கல்கியைப் பார்த்தோம். அதில் 'எத்தனை அடி வேண்டும்?' என்ற கட்டுரையில் தமிழ்ப் படங்கள் 11,000 அடிக்குள் இருக்க வேண்டு மென்பதைப் பார்த்தோம். உம்மோடு சரிக்குச் சரியாகவே பேச முடியாத ஆனந்த விகடன் பத்திரிகையைத் தாக்கி எழுதுவது சுலபமானதால் எழுதி விட்டீர்கள். 'ரஸமட்டம்' என்று எழுதுபவருக்கு பதில் எழுதுங்களேன். அவர் சொல்வதுபோல் உங்கள் கதைகள் மொழி பெயர்க்கப்பட்ட கதைகளா? நீங்கள் மீரா பாய்க்கு அடி போதாதென்று காவடி தூக்கிக் கொண்டு போவது உண்மைதானு?

கே. எம். ராஜகோபாலன்
முதலியவர்கள்

[ஆ. வி. ஆசிரியரைக் காட்டிலும் 'ரஸ மட்டம்' உங்களுக்கு உயர்ந்தவராகத் தோன்றுவது தமிழ் ஆபாச டாக்கிகளை அதிகம் பார்த்ததின் பலன் என்று கருதுகிறேன். 'ரஸ மட்டம்' 11,000 அடி விவாதத்தைப் பற்றி ஏதாவது எழுதியிருந்தாலல்லவா அவருக்குப் பதில் எழுதலாம்? என்னுடைய கதைகளுக்கும் இந்த விவாதத்துக்கும் ஏதாவது சம்பந்தம் உண்டா என்று சற்று சீக்கனே யோசித்துப் பாருங்கள். சம்பந்தம் உண்டு என்று தோன்றினல், என்னுடைய கதைகளை யெல்லாம் மொழி பெயர்ப்புக் கதைகளாகவே வைத்துக் கொள்ளுங்கள்.

மீராபாய்க்காக நான் காவடி தூக்கிக் கொண்டு போவதாக எழுதி யிருப்பது அயோக்யத்தனமான பொய். நானும் போகவில்லை; மீராபாய் படம் எடுப்பவர்களும் போகவில்லை. —ஆசிரியர்.]

10 திருச்சிராப்பள்ளி
12—7—43

கல்கி ஆசிரியருக்கு,

தங்களுக்கு ஸ்ரீ வாஸன் மேல் துவேஷம் இருப்பதால்தான் 14,000 அடியை எதிர்த்து எழுதி யிருக்கிறீர் என்று சுதேசமித்திரன் ஆசிரியர் சொல்லுகிறார். ஆனால் தாங்கள் ஆ. வி. யில் ஆசிரியராக இருந்த காலத்திலேயே தமிழ்ப் படங்கள் 3 அல்லது 3-30 மணி ஓடக்கூடாது என்றும் 2 அல்லது 2-30 மணி நேரத்தில் முடிய வேண்டும் என்றும் ஆதரித்து எழுதியும் பேசியும் இருக்கிறீர்கள். அதையேதான் இப்பொழுதும் சொல்லுகிறீர்கள். ஆனால் மற்றப் பத்திரிகை ஆசிரியர்கள் தங்களுடைய அபிப்பிராயங்களை மாற்றிக் கொண்டிருக்கிறார்கள். சுதேசமித்திரன் ஆசிரியர், அவர் பத்திரிகையானது நீங்கள் பிறப்பதற்கு முன்பிருந்தே தமிழுக்கு வேலை செய்து வருகிறதை ஞாபகப் படுத்துகிறேன் என்றும், உங்களுக்குப் புத்தி சொல்ல வேண்டுமென்ற எண்ணத்துடன்தான் நாலு பேர் முன்பு இதைப் பிரஸ்தாபிக்கிறேன் என்றும் சொல்லி யிருக்கிறார். அவருடைய புத்திமதியைக் கேட்டு அவருடைய பத்திரிகைகளைப்போல் தங்களுடைய பத்திரிகையையும் நடத்தினால் தமிழர்களாகிய நாங்கள் அவருடைய வாரப் பதிப்பையும் தினசரியையும் எவ்வளவு ஆதரிக்கிறோமோ அதைப்போல்தான் தங்கள் பத்திரிகையையும் ஆதரிக்கும்படி நேரிடும் என்பதை வணக்கத்துடன் தெரிவித்துக் கொள்ளுகிறோம். இவர் தமிழுக்காகவும் தமிழ் மக்களுக்காகவும் உண்மையாக பாடு பட்டிருந்தால் இவருடைய பத்திரிகைக்கு பிறகு வெளி வந்த தினசரிப் பத்திரிகைகள் பிரபல மடைந்து இருக்காது என்று ஞாபக மூட்டுகிறோம்.

"தினமணி" ஆசிரியர் ஸ்ரீமான் சொக்கலிங்கம் சர்க்காருக்கும் படமுதலாளிக்கும் தான் இந்த சர்ச்சை எழவேண்டு மென்று சொல்கிறார். படம் பார்ப்பவர்களாகிய பொது ஜனங்களுக்கு இந்த உரிமை கிடையாதா? எந்தக் குப்பை கூளமானாலும் தாங்கள் பார்த்துக்கொண்டே இருக்க வேணுமா? அதிகப் பணம் செலவழித்து குப்பை கூளங்களைப் படம் பிடித்து விட்டு தமிழ்ப் படம் எடுத்தால் நஷ்டம் வருகிறதென்றும் தமிழர்கள் ரஸிகர்கள் அல்ல என்றும் சொல்வது நியாயமா? வடக்கத்தி ஜனங்களிடமிருந்தும், மேல் நாட்டு ஜனங்களிடமிருந்தும் நல்ல விஷயங்களை எடுத்துக் கொள்வது பிசகா?

எஸ். ஏ. வி. சுப்பிரமணியம்.
ஆர். எம். மெய்யப்பன்.
டி. கே. பாலசுப்பிரமணியம்.
எம். எஸ். கிருஷ்ண மூர்த்தி.
எம். அனந்தராமன்.
வி. சுப்பிரமணியம்.
எஸ். ஏ. பிள்ளை.

["சுதேச மித்திரன்" ஆசிரியருடைய புத்திமதியை இந்த விஷயத்தில் நான் ஏற்றுக் கொள்வதற்கில்லை. ஆனால், தமிழுக்காகவும், தமிழ் மக்களுக்காகவும் அது எவ்வளவோ தொண்டு செய்துதானிருக்கிறது. அபிப்பிராய பேதம் காரணமாக அந்தப் பத்திரிகையின் நீடித்த தொண்டை மறுப்பது நியாயமாகாது.

—ஆசிரியர்]

11 மயிலாப்பூர்
10—7—43

கல்கி ஆசிரியரே,

இவ்வளவு மரியாதைக் குறைவாக "தமிழ் மகன்" என்று ஒருவர் எழுதி யிருக்கும் கட்டுரையைத் தாங்கள் மனப் பூர்வமாகப் பிரசுரிப்பீர்கள் என்று நான் நம்பவே முடியவில்லை. மொட்டைத் தலைக்கும் முழங் காலுக்கும் முடிச்சு போட்டாற்போல், பிலிமிற்கும், ராஜாஜி பிரச்னைக்கும் சம்பந்தமே இல்லை. முக்கிய சமாச்சாரத்தை விட்டுவிட்டு ஸ்ரீ வாஸன் அவர்கள் மீது உள்ள சொந்த மனஸ்தாபத்தினால் அவரைத் தாக்குவது சரியல்ல.

சென்ற பத்து வருடங்களாகத் தொடர்ந்து பட முதலாளிகள் கொண்டு வந்திருக்கும் நிலைமையில், திடீரென்று உயர்தரப் படங்கள் எடுத்தால் (அதாவது Comic portion மற்றும் சில இடங்கள் இவைகளை நீக்கி, முக்கியமான கட்டங்களை மாத்திரம் எடுத்தால்) நமது நாட்டில் அவ்வளவு ஆதரிப்பவர்கள் இருக்க மாட்டார்கள். இதுவரை நம் தமிழ் நாட்டில் பட முதலாளிகள் எல்லாம் பாமர ஜனங்களுக்கு ஏற்றதாகச் சிறிது மட்டமாகவே படம் எடுத்தார்கள். அதைத் திடீரென்று மாற்றுவது முடியாது. சிறிது சிறிதாக முன்னேற்றம் அடைய வேண்டுமே தவிர வேறு வழியில்லை.

அவரவர்கள் மனப்பான்மையில் வித்தியாசம் இருக்கத்தான் செய்யும். அதற்காக அவர்களைத் தூஷித்தல், தங்கள் பத்திரிகைத் தொழிலுக்கும், பொது ஜனங்களுக்குமே விரோதமானது.

ஆ. பார்த்தசாரதி.

[சம்பந்தமில்லாத ராஜாஜிப் பிரச்னையைக் கொண்டு வந்தவர் ஸ்ரீ எஸ். எஸ். வாஸன் தான் என்பதை மறந்து விடுகிறீர்கள். சொந்த மனஸ்தாபம், தூஷணை என்று தாங்கள் குறிப்பிடுவதெல்லாம் சுத்தத் தப்பான விஷயம். ஸ்ரீ வாஸனைச் சொந்த முறையில் "கல்கி"யில் தாக்கவும் இல்லை, தூஷிக்கவும் இல்லை. ஸினிமா நீளம் சம்பந்தமான அவருடைய கொள்கையைத்தான் கண்டித்திருக்கிறது. சொந்த முறையில் தூஷித்துத் தாக்கும் முறையை எதிர்க் கட்சிக்காரர்கள்தான் கையாளுகிறார்கள். ஒருவேளை அழுத்தமான நடையையே நீங்கள் 'தூஷணை' என்று தவறாக எண்ணுகிறீர்கள் போலும். விளக்கெண்ணெய் கலந்து எழுதும் வழக்கம் "கல்கி"யில் கிடையாது. பட நீளத்தைப் பற்றித் தாங்கள் சொல்லும் கருத்தும் முற்றும் பிசகானது. தமிழர்களுக்குப் படம் சிறிது மட்டமாய்த்தான் இருக்க வேண்டுமென்று சொல்வது பெரிய அவதூறு; தெரியாமல் சொல்லுகிறீர்கள்.

—ஆசிரியர்.]

# நீங்கள் ரெட் க்ராஸை ஏன் ஆதரிக்க வேண்டுமென்பதற்கு வேறொரு காரணம்



யுத்தக் கைதிகள் நம்பிக்கையை இழக்காமலும், ஆரோக்கியத்துடனும் இருக்கச் செய்கிறோம் . . . உலக சுதந்திரத்திற்காக கடும் போர் புரிந்து தங்கள் சொந்த சுதந்திரத்தைப் பறிகொடுக்க நேர்ந்த இவ்வீரர்கள் . . . ஒருவேளை உங்கள் ஊர்க்காரர்களாகவுமிருக்கலாம் . . . பிறந்த நாள்முதல் நம் இந்தியா தேச பாரம்பரியமான ஆகாராதிகளையே உண்டு வளர்ந்தவர்கள் . . . ஆனால் இன்று ஜெர்மன் அல்லது இத்தாலியன் சிறைச் சாலைகளில் இது போன்ற உணவா வழங்கப்படுகிறது? ஒருபோதுமில்லை—முன் பின் கண்டறியாத ஆகாரம், உட்கொள்ளவே முடியாது! நாம் அனுப்பும் உணவுப் பார்சல்களல்லவா அவர்களுக்கு ஆறுதலளித்து வருவது! இல்லாவிடில் அவர்கள் வெகு நாட்களுக்கு முன்னமே நம்பிக்கை யிழந்திருப்பார்களே—ஒருவேளை பசியால் சோர்ந்து மடிந்துகூட இருப்பார்கள்! வாரா வாரமும் ஒவ்வொரு இந்தியக் கைதிக்கும் அவனது பழக்க வழக்கமான ஆகாராதிகள் கொண்ட ஒரு பார்சல் கிடைத்து வருகிறது—அரிசி, பருப்பு, கறி பதார்த்தங்கள் யாவும் பார்சலில் உள்ளன. இக் கைதிகளுக்கு ரெட் க்ராஸ் பார்சல்கள் என்றால் உயிர், நம்பிக்கை, ஆரோக்கியம் எல்லாம். இந்தியாவிலுள்ள நமக்கு அவர்கள் நினைவு இன்னும் இருந்து வருகிறதென்பதைக் காண அவர்களுக்கு எத்தனை ஆறுதல்! இப்படி உணவுப் பார்சல்கள் அனுப்பி வருவதில் செலவு ஏராளமாகிறது. நிறைய பணந்தான் வேண்டியிருக்கிறது. அது தடையின்றி நடைபெற்று வர இந்தியன் ரெட் க்ராஸ் & ஸெண்ட் ஜான் உங்கள் நிரந்தர சகாயத்தைக் கோருகிறது. உங்களால் முடியுமான வரையில் உதவி புரியுங்கள்.



ஒருவன் ஜெர்மனியிலோ, இத்தாலியிலோ யுத்தக் கைதி யென்று தெரிந்தவுடன் அவனுக்கு வாரா வாரம் ஒரு பார்சல் உணவுப் பொருள்கள் அனுப்பப்படுகிறது. இது ராணுவக் கைதிகளுக்கு மட்டுமன்றி, கடற்படை, வர்த்தகக் கப்பல் வீரர், ஆகாயப் படை கைதிகளுக்கும், அடைபட்ட பேர்களுக்கும் அனுப்பப் படுகிறது ஒவ்வொரு வாரம் ஒன்று இரண்டா, 15,000 பார்சல்கள் போகின்றன. செலவென்ன குறைவா? பார்சல்கள் இந்தியாவிலிருந்து ஜினீவா ரெட் க்ராஸ் மூலமாக போயாக வேண்டும் ஒவ்வொரு பார்சலுக்கும் ரூ. 6/8 செலவாகிறது. பூர்ண வெற்றி பெறும் வரை இப்பார்சல்கள் அதிகம் தேவையாகும். தயவு செய்து உதவி புரியுங்கள்

## INDIAN RED CROSS & ST. JOHN

ஜாயிண்டு வார சாரிடீஸ் கமிட்டி பாங்வெட்டிங் ஹால், கவர்ன்மெண்டு ஹவுஸ், சென்னை. சீப் கமிஷனர்ஸ் வார் பண்டு, மெர்காரா, குடகு. ஆனரரி டிரெஷரர் பங்களூர் C. & M. ஸ்டேஷன் வார்பண்டு அஸோஸியேஷன். இம்பீரியல் பாங்கு ஆப இந்தியா பங்களூர்.

SRC-23-28 TM

# தார்பாய்களும், கேன்வாஸ்களும்

## முதன்மை ஸ்தானம் வகிக்கின்றன.

நீடித்த உழைப்பிற்கும், எக்கால சீதோஷ்ண நிலேக்கும், எத்தகைய அசாதரண உபயோகத்திற்கும் உகந்தவாறு இவைகள் தயாரிக்கப்பட்டு வருகின்றன.



பர்க்மயர் பிரதர்ஸ் லிமிடெட், ரேஸ் கோர்ஸ் ரோடு, கோயமுத்தூர்

மைசூர் சமஸ்தானம், சென்னே, காக்கிருடா முதலிய இடங்களுக்கு ஏஜெண்டுகள்

★ **கில்லாண்டர்ஸ் அர்பத்நாட் & கோ.,** ★

முதல் லேன் பீச், :: த. பெ. 261, மதராஸ்.

# இதை அளிப்பதிலேயே ஒரு அலாதி அந்தஸ்து

டிலக்ஸ் டெனார் சிகரெட்டை உங்கள் சிநேகிதர்கள் ரஸிப்பார்கள். 100% உத்தரவாதமுள்ள தூய வர்ஜீனியா புகையிலையிலிருந்து டெனார்ஸ் தயாரானவை. டி லக்ஸ் சிகரெட்டுகள் உங்களது ரஸிகத் தன்மைக்கு ஒரு அத்தாட்சியாகும். இவைகளின் தனி மணம் இவைகளுக்கே உரித்தானது. மெல்லிய தொண்டையுடையவர்கள் அனுபவிக்கக்கூடியது டெனார்தான்.

பெரிய அல்லது ஸ்டாண்டர்டு சைஸ்களில் எங்கும் கிடைக்கும்.



BY APPOINTMENT TO THE MOST HONOURABLE THE MARQUESS OF LINLITHGOW, VICEROY AND GOVERNOR GENERAL OF INDIA

# TENOR

## de luxe CIGARETTES



உங்களது உத்தரவாதம்

டி லக்ஸ் டெனார் சிகரெட்ஸ்

ஜேம்ஸ் கார்ல்டன் லிட்., லண்டன்

EASTERN LICENCEES — P. B. NO 9029 — CALCUTTA.

T-7 ACI

No. M. 4392






---

ed by R. Krishnamurthy at the "Kalki" Press,
Poonamallee High Road, [illegible] Madras

## நமது மாகாணத்தின் சகல பண்டங்களுக்கும்
## புதிய போக்கு வரத்து சாதனங்கள்

கீழ்க்கண்ட ஊர்களிலிருந்து ஊர்களுக்கு லாரி மூலம் உங்களுடைய வியாபார விவசாய பண்டங்களை வீட்டுக்கு வீடு கொண்டு போய்ச் சேர்க்க ஏற்பாடு செய்திருப்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறோம்.

# ஸ்ரீ ராமவிலாஸ் சர்வீஸ்
## லிமிடெட்

**202/203, மௌண்ட் ரோடு, மதராஸ்**

போன் : மதராஸ் "8536" :: தந்தி : "ROADHAUL" மதராஸ்

கிளை ஆபீஸ்கள் :

1. செரி ரோடு, சேலம்.
2. ஈஸ்வரன் கோவில் தெரு, கோயமுத்தூர்.
3. கண்டோன்மெண்ட், திருச்சினாப்பள்ளி.
4. கிருஷ்ணராயர் தெப்பகுளத் தெரு, மதுரை.
5. ஸ்ரீ நரசிம்ம ராஜா ரோடு, பெங்களூர்.

—: மார்க்கங்கள் :—

1. மதராஸ் — சித்தூர் — பெங்களூர்
2. மதராஸ்—வேலூர்—சேலம்—கோயமுத்தூர்
3. மதராஸ்—திருச்சி—மதுரை—திருநெல்வேலி
4. கோயமுத்தூர் — கள்ளிக்கோட்டை
5. கோயமுத்தூர் — கரூர் — திருச்சினாப்பள்ளி
6. சேலம் — நாமக்கல் — திருச்சினாப்பள்ளி
7. சேலம் — உளுந்தூர்ப்பேட்டை — கடலூர்
8. மதுரை — திருச்சி — தஞ்சாவூர் — நாகை
9. மதுரை — திருச்சி — கும்பகோணம்—நாகை



உங்களது பணியைச் செய்ய எப்போ